# மெய்வழி

## ("ஹிகம்"-மொழிபெயர்ப்புச் சுருக்கம்)

மூல நூலாசிரியர்

அல்லாமா இப்னு அத்தாவுல்லாஹிஸ் ஸிக்கந்தரிய்யி.(கத்தஸல்லாஹு ஸிர்ரஹு)

மொழிபெயர்ப்பாசிரியர்

மௌலவி அல்ஹாஜ் டி.எம். மூஸாகான் பாகவி(ரஹ்)

ஹௌதிய்யா மத்ரஸா முதர்ரிஸ்

உத்தமபாளையம்.

22 ஜூலை 1963. 1 ரபீவுல் அவ்வல் 1383.

மதுரை மாவட்ட ஜமா அத்துல் உலமா தலைவர் அல்லாமா மவ்லானா மவ்லவி எஸ்.என். ஹுஸைன் முஹம்மது பாகவி அளித்த

### மதிப்புரை

விண் மண் சமுத்திரம் மற்றெவையும் டெம் பெறாது முஃமின்களின் இருதயத்தில் இடம் பெற்று அருட் ஜோதி வீசி

அன்பர்களிடம் காட்சி அளிக்கும் அல்லாஹ்விற்கே சகல புகழும்.

இவ்வுலகம் அநித்யம் என்றும் அல்லாஹ்வின் தரிசனத்துக்கோர் அழுக்கும் இழுக்கும் என்றும் சாயுச்சிய மோன நிலையை நம்மவர்கட்கு போதித்த உத்தம நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அன்னவர் சீரிய மெய்வழிபாட்டிற் சென்ற அன்னவர்கள் கோத்திரம் கிளையார் தோழர் யாவர் மீதும் சொரிக அருள்மாரி அனந்தம்.

மௌலவி மூஸாகான் அவர்களால் "ஹிகம்" அதன் விரிவுரைகளை மூலமாய்க் கொண்டு "மெய்வழி" என்ற ஒரு நூலைத் தமிழாக்கம் செய்தது என் பார்வைக்குக் கிடைத்தது.

இந்நூலை ஒரு சிறந்த நூலாகக் கருதுகிறேன். காரணம் இக்காலை மனப்பரிசுத்தம், உலகை மதியாமை, அவா ஒழிப்பு, ஷைத்தானின் தடுப்பு, ஏகத்துவ ஒளி, இதயப் பக்குவப் பண்பாடு, மறு உலக வாழ்வு, முக்தி நிலை, சாயுச்சிய பதவி, அல்லாஹ்வின் பால் ஒன்றிப்பு போன்ற பல்லரும் ஞான வழிபாடுகள், சூஃபியாக்களின் கலாஞான அறிவின் பக்கல் இன்று எவரும் சிந்திக்காத நிலையில் இவ்வித நூல் வெளி வருவதைப் பாராட்டுகிறேன்.

இதன்ன! இந்நூலின் மூலம் "ஷரஹுல் ஹிகம்" இதன் சுவையையும் மாண்பையும் என்னால் சொல்லத்தரமன்றோ! இவ்வரிய நூலாசிரியரின் அருமுயற்சியை அன்பு நிறைந்த உள்ளத்துடன் வரவேற்று ஆசி கூறுகிறேன்.

இந்நூலாசிரியர் ஒரு மௌலவி. நல்ல அனுபவ ஞானமுள்ளவர். உத்தமபாளையம் ஹௌதிய்யா மத்ரஸாவின் நீண்ட கால அரபி ஆசிரியர். அவ்வரபி மத்ரஸாவின் ஸ்தாபகர், கொடைவள்ளல் ஹாஜி செ. முஹம்மது மீரான் ராவுத்தர் அவர்களின் மருமகர் என்பதைப் பிரஸ்தாபித்து இன்னவர்கள் இவ்வித அரிய சேவைகளை ஓயாது ஒன்றன்பின் ஒன்றாய் செய்ய வல்ல இறைவன் இவர்கட்கு நல் வாய்ப்பு அளிப்பானாக!

நான் இதைச் சரி கண்டு பல அரிய ஆலோசனையும் கருத்துப் பரிமாற்றமும் சொன்னயமும் தந்து என் மனமார்ந்த உவகையை மக்கள் நலன் கருதி ஆசிரியரின் சேவையைப் பாராட்டி இறைவனுக்காகத் தந்தேன். இந்நூல் பலகாலம் பாரில் மக்களுக்குப் பயன் தந்து பரம இறைவனை அறிந்து பலன் தர சர்வ சக்தன் அல்லாஹ்வைப் பிரார்த்தித்து இதன் ஆசிரியரையும் வாழ்த்தி ஆசி கூறுகிறேன். ஆமீன்.

மௌல்வி எஸ்.என். ஹுசைன் முஹம்மது, தலைவர்,
மதுரை ஜில்லா ஜமாஅத்துல் உலமா சபை, தாருஸ்ஸலாம் சித்தையன்கோட்டை.(மதுரை மாவட்டம்).

## முன்னுரை

இந்நூல் ஸூலூாக்குகளுக்கு–அல்லாஹுத் தஆலாவை அறிந்து அவன் வழியில் நடப்பதற்க்கென எழுதப்பட்ட ஓர் அரிய தமிழ் நூலாகும்.

இத்தகைய அறிவுகளுக்கு அரபியில் "இல்முல் ஹகாயிக்" என்றும், "இல்முல் முகாஷபா" என்றும், "இல்முல் அஸ்றார்" என்றும் பல பெயர்களும் சொல்லப் படுகின்றன. இது சம்பந்தமாக அரபி, பார்ஸி, உர்துா பாஷைகளில் அநேக நூல்கள் இருக்கின்றன. நம் தமிழ் மக்கள் இதனை அறிந்து கொள்ள நாடும் போது அரபி நூல் மூலமே அறிந்து கொள்கின்றனர். இதுவே எல்லா வகையாலும் சாலச் சிறந்ததுமாகும். தாய் பாஷையாக தமிழின் மூலம் அறிந்து கொள்ள வேண்டிய நிலையும், ஆசையுமுள்ளவர்களுக்கு சுருக்கமான சிற்சில தமிழ் நூல்களுமிருக்கின்றன. என்றாலும் எல்லோரும் பிரயோஜனம் அடையத்தக்க வகையில் ஒரு நூல் எழுதவேண்டுமென இது விஷயங்களடங்கிய கிதாபுகளை மாணவர்களுக்கு ஓதிக் கொடுக்கும் போதெல்லாம் பல காலம் நினைத்திருந்தேன். அதற்குகந்தாற் போன்று அல்லாமா இப்னு அதாவுல்லாஹிஸ் ஸிக்கந்தரிய்யி (ரஹ்) அவர்களுடைய "ஹிகம்" எனும் ஓர் அரிய கிதாபை படித்துக் கொடுக்கும் சந்தர்ப்பமேற்பட்டது. அது சமயம் அதன் கருத்துக்களை எழுதலானேன். அதுவே இத்தகையதொரு நூலுருவில் அமைந்திருக்கிறது.

இதில் குர்ஆன்–ஹதீஸ்களுக்கு முரணாக ஒன்றும் இருக்காது; கருத்துக்கள் விளங்காமல் அவ்விதம் இருப்பதாகத் தோன்றினால் – அதை மறுக்காமல் உண்மையறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இத்துடன் மூல நூலாசிரியர் அவர்கள் தங்களின் சில சிஷ்ய சகோதரர்களுக்கு எழுதிய மூன்று ஞானக் கடிதங்கள், ஓர் வினா–விடை, முனாஜாத் முதலியவற்றின் கருத்துக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

எனவே இதில் கூறப்பட்டிருக்கும் விஷயங்களை கிரஹிக்கும் ஆற்றலைப் பெறுவதுடன்–அவ்விதமே செயல்படும் பாக்கியத்தையும் நாம் அடைய எல்லாம் வல்ல ஹக்கு தஆலா நம்மனைவர்களுக்கும் நல்லருள் தந்தருள்வானாக. ஆமீன்.

## உள்ளடக்கம்.

60 எல்லா கேள்விகட்கும் பதில் சொல்வது அறிவிலியின் அடையாளம்

61 துன்யா சுருக்கத்தால்தான் கூலி தருவது மறுமையிலானது

62 இபாதத்தில் இன்பமுண்டாவது அங்கீகரிக்கப்பட்டதன் அடையாளம்

68 ஆதரவு–மேலெண்ணம் இவ்விரண்டின் வேறுபாடு

69 ஆரிபீன்களின் குறிக்கோள் உண்மை அடிமைத்துவமே

71 ஆரிபீன்கள் மனவெழுச்சியைப் பயப்படுவார்கள்

75 அழியா மதிப்பும் அழியும் மதிப்பும்

78 கூலியைக் கடன் சொல்வதை விட்டும் அல்லாஹ் தூயவன்

80 அல்லாஹ் கொடாமலிருப்பதும் ஒருவகைக் கொடைதான்

83 பெருமை அளிக்கும் வணக்கத்தை விட பணிவைத் தரும் பாவம் மேலானது

84 உலகம் தோன்றவும் – நிலைத்திருக்கவும் இறையிடமே தேவையாகிறது

85 மனிதர்கட்கு ஏழ்மை இயற்கையே

88 அல்லாஹ்விடம் ஆரிபீன்கள் எப்பொழுதும் துளும்பிக் கொண்டே இருப்பார்கள்

90 கஷ்டத்தின் நோவினை குறைய வழி

91 அல்லாஹ்வின் ஏற்பாட்டில் இரக்கத்தைத் தெரியாதவன் உறுதி குறைந்தவனே!

94 கேட்டதும் கிடைக்காததால் கெட்ட எண்ணம் கொள்ளாதே!

97 ஆபிதுகளைக் கேவலமாகப் பாவிக்காதே

99 ஏகத்துவத்தில் அறிவுடையவனும், மந்த புத்தியானும்

103 சடைவு ஏற்படுவதால் அமல்கள் பலவகையாயிற்று

104 தொழுகையின் பிரயோஜனங்கள்

108 அமல் செய்வதில் அல்லாஹ்வின் அனுக்கிரஹம்

110 அல்லாஹ் கொடுத்ததை தனதென்று தாவா செய்யாதே

111 நப்ஸின் கேட்டை ஒழிக்காமல்–வழிகள் திறக்காது

113 துஆவுக்கு பணிவும் தளுமையுமே பிரயோஜனம்

117 திரை இருவகை

120 ஈமானின் சுடர் மறுமையை நெருங்கச் செய்து துன்யாவின் அழிவை வெளியாக்கும்

125 எல்லா வஸ்துக்களின் உள்ளமையும் அல்லாஹ்வைக் கொண்டேதான்

130 துறவிகள் புகழை வெறுப்பார்கள்

138 அல்லாஹ்வையும்–அவ்லியாக்களையும் அறிய அவனின்றி ஆதாரமில்லை

139 இரகசியத்தின் திரை நீங்குவது அடியார்க்குத் துன்பமாகும்

140 வழிப்படுவதில் நப்ஸின் அம்சம் மறைவானது

141 அமல்களை எவரும் பார்க்கக் கூடாதென நினைப்பதும் முகத்தாட்சன்யமே

142 மனிதர்களறிய பிரியம் வைப்பது அமலில் உண்மை இல்லை என்பதன் அடையாளமாகும்

143 உண்மை அடிமைத்துவம்

151 துஆ கேட்பது மேலா? கேட்காமை மேலா?

157 அல்லாஹ்வின் அனுக்கிரகத்தால் பேசுபவர் தவறினும் சோர்வடையார்

158 அனுபவப்பட்டவரின் பேச்சில் குணபாடிருக்கும்

160 அல்லாஹ்விற்காக பேசுகிறவரின் பேச்சை இலகுவாய் விளங்கலாம்

161 உபதேசம் கல்பின் உணவாகும்

164 மனிதர்களிடமிருந்து ஏதுமொன்றை வாங்கும் முறை

169 மனிதர்கட்கு அமல்களைக் கடமையாக்கியது அவர்கள் நன்மைக்கே

172 அல்லாஹ்வின் உபகாரங்களை மிகுத மனிதர்களும் தங்களை விட்டும் விலகும்போது தான் தெரிகின்றார்கள்

174 வேற்றுமை நிறைந்த கல்புடன் செய்யும் அமல் ஒப்புக் கொள்ளப்படாது

178 தவறினால் நிறைவேற்ற முடியுமானதும் – முடியாததுமான இருவகை ஹக்குகள்

180 ஒருவன் ஒன்றைப் பிரியப்பட்டால் அவன் அதற்கு அடிமையே

183 அல்லாஹ்வை அறிவதே அவனுடன் சேர்வதென்பது

185 ஆரிபீன்கள் கல்புகளில் இரகசியங்கள் பொதுவாகத் தோன்றி அப்பால் கருத்துக்களை தெளிவாக்கப் படும்.

186 அல்லாஹ்வில் நின்றும் அறிவுகள் வரும்போது கல்பின் திரைகளைக் கிழித்து விடும்

190 அல்லாஹ்வின் நிஃமத்துக்கள் நேமமாயிருக்க நினைக்காதே

194 போதிய அளவு மட்டும் இரணமிருப்பது பெரும் அனுக்கிரஹமாம்

195 கொஞ்சத்தைக் கொண்டே சந்தோஷம் கொள்வது கவலைகளைக் குறைவாக்கும்

197 துன்யாவின் வெளிப்படை, அறிவிலிகளின் அவேட்கைக்கும்– அதன் அந்தரங்கம், ஆரிபுகளின் வெறுப்பிற்கும் காரணமாம்

199 பிரயோஜனமான அறிவும் – அதன் பலனும்

200 உண்மை அடியார் அல்லாஹ்வின் மீதே நினைவாயிருப்பர்

202 ஷைத்தான் மனிதர்கள் மீது சாட்டப்பட்டவன்; கவனமிருக்கட்டும்

204 தாழ்மையுள்ளவன் என்று தன்னை ஸ்திரப்படுத்தினால் பெருமையுள்ளவன் என்பது திண்ணம்

205 உண்மை முஃமின் தன்னை மறந்துவிட்டு அல்லாஹ்வையே புகழ்வான்

206 அல்லாஹ்வளவில் பிரயாணம் செல்வதும்– அப்பிரயாணத்தில் சந்திப்பவைகளும்

207 மனித ஜன்மம் மறைவான உலகத்திற்கும்– வெளியுலகத்திற்கும் மத்தியிலுள்ளது

208 மறைவான விஷயங்களின் வாயல் திறக்கப்படாதவன் ஆசையில் சிக்குண்டவனே!

210 அல்லாஹ்வினளவில் பிரயாணம் செய்பவனும்– பிரயாணத்திற்கு முன்சேர்ந்தவனும் (ஸாலிகும்–மஜ்தூபும்)

213 இபாதத்திற்கு கூலி கேட்பவன் உண்மை ஆபிதல்ல

216 அல்லாஹுஹத்தஆலா தந்த மூன்று வித சங்கைகள்

217 குறைந்த வயதில் அதிக பரகத்து

219 சிந்தனை இருவகை

முதல் கடிதம்

இரண்டாம் கடிதம்

வினா-விடை

மூன்றாம் கடிதம்

முனாஜாத்து

## மெய்வழி

அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன். வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரஸூலிஹி ஸெய்யிதினா முஹம்மதின் வ ஆலிஹி வஸஹ்பிஹி அஜ்மயீன்.

(அல்லாஹுத் தஆலாவை நாடி அவனது திருவருளைப் பெற்று ஆரிபீன்கள் மகாமையடைந்து தௌஹீத் எனும் கடலில் மூழ்கி அல்லாஹ்வைக் கொண்டே நிலைக்க நாடும் ஸாலிக்கே!)

1. உனது தொழுகை நோன்பு போன்ற வெளிப்படையான இபாதத்துகளில் ஏதேனும் குறைகள் ஏற்பட்டாலும் அல்லது தவறுதலாக சில குற்றங்கள் உன்னில் நிகழ்ந்து விட்டாலும் அல்லாஹுத் தஆலாவின் பேரில் ஆதரவை முறித்து விடாதே! அவ்விதம் ஆசை முறிவது அமல்கள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறாய் என்றும் அதுவே நம்மைக் காப்பாற்றுமென்றும் எண்ணுகிறாய் என்பதற்குரிய அறிகுறியாயிருக்கின்றன. இவ்விதம் எண்ணுவது ஆபிதீன்களில் ஆரம்ப நிலையிலுள்ளவர்களின் பழக்கமாகும்.

அல்லாஹுத் தஆலாவை அறிந்தவர்(ஆரிபீன்)கள் தன்னில் அதிகமதிகம் இபாதத்துகளேற்பட்டாலும், அல்லது தவறுகள் நடந்த போதிலும் அல்லாஹுத் தஆலாவின் கற்பனை

நடந்தது என்றே எண்ணிக் கொள்வார்கள். (அதற்காக) சந்தோஷமோ, கவலையோ கொள்வதில்லை; எப்போதும் அல்லாஹு என்ற தியானக்கடலில் மூழ்கி இருப்பார்கள். தமக்கு ஒரு சக்தி இருப்பதாக நினைக்க மாட்டார்கள். (ஏனெனில்) உண்மையில் யாவற்றையும் செய்பவன் அல்லாஹுதான் என்றே அவர்கள் கண்டு கொண்டார்கள். தான் அவனது செய்கை வெளியாவதற்கு ஒரு (மள்ஹர்) ஸ்தானமேயன்றி வேறில்லையாகையால் ஒரு இபாதத்து புரிவது அவர்களுக்கு ஆசையையோ, ஒரு தவறுதல் இழைப்பது பயத்தையோ அதிகமாக்காது. "லா ஹௌல வ லா குவ்வத்த இல்லா பில்லாஹி" என்றே இருப்பார்கள்.

2. அல்லாஹுத் த ஆலா உன்னை ஒரு வேலையில் ஏற்படுத்தியிருக்கும் போது நீயாகவே அந்தத் தொழிலை விட்டுவிட நினைப்பது உன்னில் மறைந்திருக்கும் பேராசையாகும். ஏனென்றால், உனது எஜமானனாகிய அல்லாஹுத் தஆலாவின் ஏற்பாட்டை நீ பொருந்தாமல் உனது (நப்ஸின்) எண்ணப்படி நடக்க விரும்புகிறாய். (எனவே) அவ்விதம் எண்ணுவதின் வெளிப்படையான நோக்கம், அல்லாஹுத் தஆலாவின் தியானத்திலேயே இருந்து அவனோடு முடுக வேண்டுமென்பதாக இருந்தாலும், உண்மையில் அதன் நோக்கம் "நீ பெரிய மனிதன், அவ்லியாக்களின் குணம் பெற்றவன்" என ஜனங்களில் பிரசித்தி பெற்று, மனிதர்கள் உன்னை நோக்கி வரவேண்டும்(என்பதும்) எந்த வகையிலாவது மதிப்பு வேண்டும் என்பதுமேயாகும்.

இவ்வித எண்ணம் கொள்வது (முரீதுகளை) அல்லாஹ் வழியில் நடப்பவர்களைக் கொல்லும் நஞ்சாயிருக்குமென பெரியோர்கள் கூறுகிறார்கள். மேலும் ஜனங்கள் உன்னை விரும்பி வரப்போகவிருந்தால் உனது நித்திய இபாதத்திற்கு இடையூறு ஏற்பட்டு அவைகளை விட வேண்டியதாய் ஏற்படும். அதனால் நீ சாதாரண மனிதர்களிலும் மோசமானவனாக ஆகி விடுவாய்.

அல்லாஹுத் த ஆலா உன்னை தொழிலை விட்டும் ஒழித்து வைத்திருக்க, நீ தொழிலை விரும்புவது மேலான மனோ உறுதி என்ற உச்ச நிலையை விட்டும் இறங்குவதாயிருக்கும். ஏனெனில் நீ உலகத்தொழிலை விட்டும் விலகி அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு பொருந்தி அவன் ஊழியத்தில் ஈடுபட்டு அவனைக் கொண்டு கொழுகி இன்பம் பெற்றிருந்தாய்; இப்போது அவனை விட்டும் விலகி உலக மக்களோடு கலந்து (கல்கு) சிருஷ்டிகள் என்ற உலகத்தோடு கொழுகிவிட நாடுகிறாய். ஆகையால் உண்மையான ஸாலிக்காக இருந்தால் அல்லாஹுத் தஆலா தன்னை எந்த விதமாக வைத்திருக்கிறானோ அதை அன்போடு ஏற்று பொருந்தி இருக்க வேண்டும். தானாகவே வேறொன்றை விரும்பவும், புறக்கணிக்கவும் கூடாது. அவ்வாறு செய்தால் அவன் ஏற்பாட்டைப் பொருந்தாத நன்றி கெட்டவனாக ஆகி விடுகிறான். அல்லாஹ் நம்மைக் காப்பானாக!

3. எவ்வளவு பெரிய உறுதியான பலம் இருந்த போதிலும் அல்லாஹுத் தஆலாவின் கற்பனை என்னும் சுவர்களை (அது)

உடைத்து விடாது. ஆகையால் உனது வீணான யோசனைகளையும்-எண்ணங்களையும் விட்டு விட்டு அல்லாஹுத் தஆலாவின் சட்ட திட்டங்களையும் அவன் உனக்கு ஏற்படுத்திய (மற்ற)வைகளையும் அன்புடன் ஏற்றுக் கொள்வாயாக!

4. துன்யாவின் சிந்தனைகளை விட்டு உன்னை நீயே ராஹத்தாக்கிக் கொள்! நீ நினைத்த காரியங்கள் எத்தனையோ கைகூடாமற் போய்விடும்; அப்போது நீ கைசேதப்படுவாய். இந்தக் கைசேதம் எந்தவித பிரயோசனத்தையும் தராது! உனக்காக அல்லாஹுத் தஆலா பிணையேற்ற கரியத்தில் நீ தலையிடாதே அவ்விதம் (மீறித்) தலையிடுவது அவன் எஜமான், நீ அடிமை என்ற லட்சியத்திற்கு முரணும் வீணுமாகும். அதுமட்டுமல்ல!

5. அல்லாஹுத் தஆலா உனக்காகப் பிணையேற்றுக் கொண்ட இரணம் போன்றவைகளில் நீ முயற்சி செய்து கொண்டு, உன்னிடத்தில் அவன் கேட்டுக் கொண்ட தொழுகை-நோன்பு-திக்ரு-பிக்ரு போன்ற இபாதத்துகளில் நீ குறைசெய்வது உன்னுடைய அகப்பார்வை மங்கி விட்டதன் அடையாளமாகும். "என்னை(யறிந்து) வணங்குவதற்கல்லாது மனித வர்க்கத்தையும், ஜின் வர்க்கத்தையும் நான் படைக்கவில்லை" என்றும், "உலக உயிரினங்களின் இரணம் அல்லாஹ்வின் வசம் இருக்கிறதென்றும்" அவன் கூறுகிறான். அவ்விதமிருக்க நாம் இரணங்களுக்கு முயற்சித்து வணக்கங்களில்

அசட்டையாயிருப்பது, அல்லாஹுத் தஆலாவின் மீதும் அவனது வசனமாகிய குர் ஆனின் மீதும் உண்மையான நம்பிக்கை இல்லை என்ற அத்தாட்சியாகும். இன்னும் அதனை சிந்திக்கும் அகக்கண், குருடாகி இருப்பதின் அடையாளமாயுமிருக்கும்.

6. அல்லாஹ்வின் பாதை செல்லும் ஆரம்ப வழிப்போக்கனே! (ஸாலிக்கே!) உனது மனித இயல்பு அற்று, அல்லாஹுத் தஆலாவுக்கும் உனக்குமிடையில் உள்ள திரைகள் நீங்கி அவனுடன் சேரவேண்டுமென்று நீ அநேக நாட்கள் அல்லாஹ்விடம் துஆ கேட்டும் காரியசித்தி அடையாததை முன்னிட்டு கருணை மிகுந்த "ரப்பின்" மீது உனக்கு ஆசை முறிவு ஏற்பட வேண்டாம். இவ்விதம் சித்தியடையாமல் பிந்துவது உனக்கு நலமாயிருக்கவும் கூடும். அதாவது நீ அதிகமாக அவனை வணங்கவும், திக்ரு செய்யவும் காரணமாய் விடுகிறது. "என்னிடம் து ஆ கேளுங்கள், நான் ஜவாபு சொல்கிறேன்" என்று அவன் குர் ஆனில் கூறியிருப்பது அவன் உங்களுக்காகத் தெரிந்து கொண்ட விஷயத்திலும் அவன் நாடிய நேரத்திலுமல்லாது உங்களுக்காக நீங்களே தெரிந்து கொண்ட விஷயத்திலும் நீங்களே நாடிய நேரத்திலும் என்பதல்ல! ஏனென்றால் ஒவ்வொரு விஷயத்தின் முடிவு நன்மையோ, தீமையோவென்று நமக்குத் தெரியாமலே நாம் கேட்போம். (ஆனால்) அவன் எல்லாவற்றின் முடிவையும் தெரிந்த தயாளன்! ஆளுக்கும், இடத்திற்கும், நேரத்திற்கும் தகுந்தபடி (அவன் அருள்) செய்து விடுவான்; நாம் கேட்டதை விட அவன் செய்வது நலமாயிருக்கும். ஆகையால் நாம் கேட்டது

நடக்கவில்லை என்பதற்காக ஆசை முறிய வேண்டாம்; நாம் கேட்டதை விட மேலான நலம் தான் நடக்கிறது.

7. அல்லாஹுத் தஆலாவின் வாக்குறுதி நிறைவேறாமலிருப்பது உன்னை அவநம்பிக்கையிலாழ்த்தி விட வேண்டாம். காலம் குறிப்பிட்டிருந்த போதிலும் சரியே! ஏனெனில் அந்த வாக்குறுதி நிறைவேறுவதற்கு சில காரணங்களும்-ஷர்த்துகளுமிருக்கலாம். அவைகள் நிறைவேறாததால் வாக்குறுதியும் நிறைவேறாமலிருக்கலாமே அல்லாது வேறில்லை. "அல்லாஹ் வாக்குறுதிக்கு மாறு செய்ய மாட்டான்" என்று அவனே குர் ஆனில் கூறுகிறான். ஆகவே அவனின் வாக்குறுதியில் சந்கேகப்பட்டால் உனது மன ஒளி தூர்ந்து அகப்பார்வை மங்கி விடும். எனவே அவன் வாக்கில் சந்தேகப்பட வேண்டாம். அவனின் தகுதியை அறிந்து ஒடுங்கி அவனுடன் அதபாயிரு! மனந்தெளிந்து அகப்பார்வை பிரகாசிக்கும்.

8. மஃரிபாவைத் தேடுதல் எனும் வாயில் உனக்குத் திறக்கப்பட்டால் அது காரணமாக உனது வெளி அமல்கள் குறைவதைப் பற்றி வருந்த வேண்டாம். ஏனெனில் அவன் அந்த வாயிலை உனக்கு அவனது நாட்டத்தைக் கொண்டு திறந்தானேயல்லாது உனது அமல்களால் திறக்கவில்லை. மஃரிபா என்பது அவன் உனக்கு அனுப்பும் ஹதியாவாகும். அமல் என்பது நீ அவனுக்கு அனுப்புகின்ற ஹதியாவாகும். இவ்விரண்டிற்குமிடையில் எவ்வளவோ வித்தியாசமிருக்கிறது. அங்ஙனமிருக்க அமலால் மஃரிபா உண்டானது என்று எவ்வாறு

சொல்ல முடியும்? ஆனால் மஃரிபா உண்டாவதற்குத் தான் அமல்கள் செய்வது! எனவே மஃரிபாவின் காரணமாய் அமல்கள் குறைவதைப்பற்றி வருந்தாதே.

9. மன நிலைகள் பலவாறாயிருப்பதால் அமல்களின் இனங்களும் பலவாறாயிற்று.

10. அமல்கள் என்பது வெளி அவயவங்களைக் கொண்டு செய்யும் சில கிரியைகளாகும். ஆனால் அதன் உயிர் (இக்லாஸ்) களங்கமற்றிருப்பதாகும். மனிதனின் உடலில் உயிரில்லாவிட்டால் பிணம் எனும் பெயர் பெற்று வெறுப்புக் கொள்வது போன்று இக்லாஸில்லாத அமல்களை அல்லாஹ் பிரியம் வைக்கமாட்டான். அவனிடத்தில் அதற்கு நல்ல அமல் என்று பெயரும் கிடையாது.

11. இபாதத்துகளில் இக்லாஸ் உண்டாவதற்காக "பிரபல்யப்படுத்தாமை" எனும் பூமியில் உன்னைப் புதைத்து விடு! பிரபல்யப்படக் கூடிய எந்த விஷயத்தையும் செய்யாதே! நீ நினையாமல் ஜனங்களிடத்தில் பிரபல்யம் ஏற்பட்டு விட்டாலும் கூட, உனக்கொரு மதிப்பிருப்பதாக எண்ணாதே! ஜனங்களிடத்தில் மரியாதையாகவும் ஒழுக்கமாகவும் உறவாடிக்கொள்.

பூமியில் புதைக்கப்படாத தானியங்களைப் பறவைகள் கொத்தித் தின்று விடும். அவை பறவைகளுக்குச் சிக்காமல் மறைந்து கிடந்த போதிலும் இலோசாக முளைத்து பிரயோஜனமில்லாது போய் விடுகிறது. இம்மாதிரியே ஆரம்ப காலத்தில் உன்னை மறைத்துக் கொள்ளாவிட்டால் ஷைத்தான்

வலையில் சிக்கிக் கெட்டுப்போய் விடுவாய். உன்னை மறைத்து இக்லாஸுடன் திக்ரு-ஃபிக்ரு செய்து தகுதியான பின்னர், அல்லாஹுத் தஆலா நாடினால் வெளிப்படுத்துவான். (அவன்) நாடினால் மறைத்துக் கொள்வான். ஆகவே நீ பிரபல்யப் படுவதை விரும்பாதே!

12. ஜனங்களை விட்டும் ஒழிந்திருந்து, அல்லாஹ்வின் தத்துவங்களைப் பற்றி "சிந்தித்தல்" எனும் மைதானில் நுழைவது போன்று வேறெந்த வஸ்துவும் மனதை அவ்வளவு சுத்தப்படுத்தாது. ஜனங்களோடு கலந்திருந்தால் பார்வை அவர்களில் பதிந்து மனதை அவர்களின் பக்கம் திருப்பி விடும். இதனாலே தான் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் **"ஒரு மணி நேரம் (அல்லாஹ் விஷயத்தில்) சிந்திப்பது எழுபது வருடம் இபாதத்துச் செய்வதை விட மேலானது"** என்று கூறினார்கள். ஆகையால் சதா (நீ) அவனைப் பற்றியே சிந்திப்பாயாக!

13. கல்பு எனும் கண்ணாடியில் உலகத்தின் கோலங்களும்-ஆசாபாசங்களும் பதிந்து கிடக்கையில் அது எவ்விதம் பிரகாசிக்கும்? அல்லது அந்த கல்பாகிறது திரேக இச்சையில் சிக்குண்டிருக்கையில் அது எவ்விதம் அல்லாஹுத் த ஆலாவினளவில் பிரயாணமாகும்? அல்லது அந்த கல்பாகிறது மதிமயக்கம் எனும் முழுக்கை விட்டுத் துப்புறவாகாத வரையில் அல்லாஹ்வின் சந்நிதானத்தில் நுழைவதற்கு அது எங்ஙனம் ஆசைப்படும்? அல்லாஹுத் த ஆலாவின் பள்ளிவாயலில் முழுக்காளி நுழையக் கூடாது. அது போன்று அவனை மறந்து

கிடக்கின்ற முழுக்காளி அவனின் சந்நிதானத்தில் நுழைய முடியாது.

அந்த கல்பாகிறது தன்னின் தவறுதல் எனும் பாவங்களை விட்டு தௌபா(பாவமன்னிப்புக் கேளாமல்) செய்யாத வரையில் அல்லாஹுத் தஆலாவின் இரகசியங்(ஸிர்ரு)களை அறிந்து கொள்ள எப்படி அவிழ்க்கை கொள்ளும்? மேற்கூறிய நான்கு குணங்களும் கல்பை பிரகாசிக்க விடாமல் தடுக்கக் கூடிய முரணான வஸ்துக்களாயிருக்கின்றன. ஆகையால் இந்த நான்கு கணவாய்களையும் கடக்காமல் அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்தில் செல்லவோ–கல்பை துலக்கவோ முடியாது. எனவே தனித்து–பசித்து–விழித்து–பேசாமலிருந்து நேமமாக அல்லாஹுத் த ஆலாவின் (வல்லமையை) சிந்தித்து திக்ரும் செய்து மேற்கூறிய நான்கு கணவாய்களையும் கடந்து கல்பை சுத்தி செய்து அவனின் சந்நிதானத்தில் செல்ல இடுப்பைக் கட்டி எழுந்து வரவும்! இனி அவனுடைய வஹ்தானிய(ஏகத்துவ)த்தைப் பற்றிச் சொல்வோம். ஹுவல்ஹாதீ.

14. உலகம் எனும் சிருஷ்டிப் பொருள்களனைத்தும் இல்லாமை எனும் இருளேயாகும். அதை உள்ளமை எனும் பிரகாசத்திற்குக் கொண்டுவரச் செய்தது(தோற்றத்தில் உருவாக்கியது) அல்லாஹுத் தஆலாவின் வெளிப்படுதலேயாகும்.

உலகை "இருளென்று" சொன்னது ஏனெனில், அதன் வெளித்தோற்றத்தை மட்டும் கவனிப்பவர்களுக்கு அல்லாஹுத் தஆலாவின் அறிவை மறைக்கிறது; உள்ளமை எனும் சூரியனை மறைப்பதால் அதற்கு மேகம் என்றும் சொல்லலாம். ஆகையால் உலகத்தின் வெளிப்படையைப் பார்ப்பவர்களுக்கு அது இருளாகவே தெரியும். ஆனால் அதன் அந்தரங்க நிலையைக் கவனிப்பவர்களுக்கு பிரகாசமாய்த் தோன்றும். இது பற்றித்தான் அல்லாஹுத் தஆலா குர் ஆனில் "**அல்லாஹ் வாகிறவன் வானம் பூமியின் பிரகாசமாயிருக்கிறான்**" என்று சொல்லுகிறான். ஆகவே ஒருவன் உலக வஸ்துக்களைப் பார்த்து அதில் அல்லாஹுவை தரிசிக்காவிட்டால், அல்லது சிருஷ்டிகளைக் காண்பதோடு அவனையும் தரிசிக்காவிட்டால், அல்லது சிருஷ்டிப் பொருள்களைப் பார்க்குமுன் அல்லது பார்த்த பின்னராவது அல்லாஹ்வை தரிசிக்காவிட்டால் "பிரகாசம்" எனும் "ஹக்கு"(அல்லாஹ்) அவனுக்குத் தவறி விடுகிறது. உலகமெனும் மாய்கை, மஃரிபாவெனும் சூரியனை அவனை விட்டும் மறைத்து விடுகிறது.

ஆனால் மெஞ்ஞானிகள் சிருஷ்டிப் பொருட்களைப் பார்த்த மாத்திரத்தில் ஹக்கையே தரிசித்துக் கொள்வார்கள். அதாவது "இப்பொருளடங்கலும் ஹக்கின் தோற்றமேயல்லாது வேறொன்றுமல்ல" என்று தெரிந்து கொள்வார்கள். இதைப் பற்றி ஒரு பெரியார் "இலாஹை (ஹக்கை) நான் அறிந்தது முதல் மற்றொன்றுண்டாயிருப்பது என்னிடத்தில் முடியாத காரியமாகும்" எனக் கூறுகிறார்கள். "ஈமான் எனும் கண்ணைக்

கூர்மையாக்கு! எல்லா வஸ்துக்களிலும் நீ அல்லாஹ்வைக் காண்பாய்" என்றும் ஒரு பெரியார் கூறுகிறார்கள்.

இன்னுமொரு பெரியார் "எந்த வஸ்துக்களிலும் அல்லாஹ்வைப் பார்க்காமல் அவ்வஸ்துக்களை நான் பார்க்கிறதில்லை" என்று சொல்லுகிறார்கள்.

அல்லாஹ்வில் லயித்த ஆரிபீன்கள் "சிருஷ்டிகள் தனியாக நிலைத்திருக்க முடியாது; அல்லாஹ்வைக் கொண்டுதான் அவைகள் நிலைத்திருக்கின்றன; அதாவது, அவனின் தோற்றத்தைத் தவிர மற்றொன்றில்லை; மற்றொன்றைப் பார்க்கவும் முடியாது" எனவும் கூறுகிறார்கள்.

15. அல்லாஹுத் தஆலாவோடு மற்றொன்று இல்லாதிருக்க, அவனை விட்டு உன்னை மறைத்துக் கொண்டது "அவனுக்கு அடக்கி ஆளுதல்" எனும் தன்மை உண்டென்பதற்கு அத்தாட்சியாகும். அவனின் வெளியாகும் அபாரத் தோற்றமேதான் உன்னை மறைத்து விட்டது. சூரிய பிரகாசத்தின் அபரிமிதம் தான் (நீ) அதைப் பார்க்கிறதை விட்டு கண்ணைத் தடுத்துக் கொள்கிறது. இதே போன்றுதான் அவனுடைய மறைவும்! அவ்விதமில்லாவிட்டால்...?

16. எல்லா வஸ்துக்களையும் அவனே(படைத்து) வெளியாக்கி இருக்க, அவனை அந்த வஸ்துகள் எப்படி மறைக்கும்? அதாவது அவனே சிருட்ஷ்டிகள் யாவுமாக வெளியாகி இருக்க அவனது ஒரு சிருஷ்டி அவனை எவ்விதம் மறைக்க இயலும்?

வஸ்துக்கள் அடங்கலிலும் வெளியாகி இருக்கிறவனை அவ்வஸ்துக்கள் எவ்விதம் மறைக்கும்?

எல்லா வஸ்துக்களுக்காகவும் வெளியாகி நிற்பவனை அது எப்படி மறைக்கும்?

எல்லா வஸ்துக்களுக்கு முன் அவனே வெளியாகி இருக்க அவனை அவை எங்ஙனம் மறைக்கும்?

அவனுடனே ஒரு வஸ்துவுமில்லாது தனித்தவனாயிருக்க, அவனை ஒரு வஸ்து எப்படி மறைக்கும்?

உண்மையில் அவனைத் தவிர மற்றொன்றிற்குத் தனித்த உள்ளமையில்லை; எல்லாவற்றைப் பார்க்கினும் அவனே உனக்கு மிக நெருங்கி இருக்க ஒரு வஸ்து அவனை எவ்விதம் மறைக்கும்?

அவன் இல்லாவிட்டால் எந்த வஸ்துவும் உண்டாகாது; அப்படிப்பட்டவனை ஒரு வஸ்து எங்ஙனம் மறைக்கும்?

எனது ஆச்சரியமே! உள்ளமை எனும் தன்மை வாய்ந்தவன் இல்லாமை எனும் சூனியப் பொருட்களில் எப்படி வெளியாவான்?

பூர்வீகமானவனுடன் புதிய வஸ்துக்கள் எவ்விதம் நிலைக்கும்?

பொய் எங்ஙனம் மெய்யுடன் நிலைக்கும்? குர் ஆனில் "அல்லாஹுத் தஆலா மெய்(ஹக்கு) வந்து விட்டது; பொய்(பாத்தில்) போய்விட்டது என (நபியே) சொல்லும்" என்று கூறுகிறான். ஆகவே ஹக்கு அல்லாதது போய் விட்டபடியால்

நிலை உள்ளது அடங்கலும் ஹக்குதான் என்பது திண்ணமாகி விட்டது.

17. ஒரு நேரத்தில் அல்லாஹுத் த ஆலா ஒன்றை வெளியாக்க, அதே நேரத்தில் வேறொன்று உண்டாக வேண்டுமென்று நினைப்பவன் மடமைத்தனத்தில் ஒன்றையும் விட்டவனாகான்! ஆகவே ஒருவனை மார்க்கம் விலக்காத ஒரு விஷயத்தில் அல்லாஹுத் தஆலா(உன்னை) ஏற்படுத்தியிருந்தால் சந்தோஷமாக அதை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவன் நாட்டத்தோடு தன் நாட்டத்தைப் பிணைத்துக் கொண்டு அதபாக இருக்க வேண்டும்.

18. துன்யா வேலைகளில் சிலவற்றை முடித்துக் கொண்டு, இபாதத்துகளில் ஆரம்பிப்போம் என்று நினைப்பதும் ஒருவித மடத்தனமேயாகும். துன்யா வேலைகளில் ஒன்றை யொழிக்க அதைப்பார்க்கிலும் அதிகமான வேலைகள் வந்து கொண்டுதான் இருக்கும். அல்லது திடீரென மௌத்து வந்து விடும் அல்லது உனது நினைவு மாறிவிடக்கூடும். ஆகையால் ஆகிரத்தின் வேலைகளைப் பிற்படுத்தாமல் துரிதப்படுவாயாக.

19. நீ நினைத்த காரியம் துரிதமாகக் கை கூடுவதற்காக தற்போது ஈடுபட்டிருக்கிற வேலைகளை விட்டு வேறொரு வேலையில் ஈடுபடுத்தும்படி அல்லாஹுத் த ஆலாவிடம் கேட்காதே! அவன் நாடினால் நீ இவ்வாறிருக்கவே உன்னை அவன் தனது மஹ்பூபுகளில் சேர்த்து அவனுடைய இன்பத்தில் இருக்கச் செய்வான். ஆகையால் அவனுடைய இஷ்டத்தில் உன்னை விட்டு விட்டு, அதபாயிருந்து கொள்!

20. உண்மையான ஸாலிக்கொருவர் அல்லாஹ்வின் வழியில் நடக்கும் மத்தியில், அல்லாஹுத்த ஆலாவின் சில இரகசியங்கள் அவருக்கு வெளியாகி, "இது தான் நாம் நாடிய விஷயம்; (நாம்) நாடியதைப் பெற்றுக் கொண்டோம்; இதோடு பயணத்தை நிறுத்தி விடுவோம்" என்று நினைத்தால், அல்லாஹுத் தஆலாவின் புறத்திலிருந்து அவரின் மனதில் சில உதிப்புகள் உண்டாகும். அதாவது, ஓய் ஸாலிக்கே! நீ நாடிய விஷயம் இன்னும் முன்னாலிருக்கிறது, இவ்விடத்தில் நின்று விடாதே! உடனே பயணத்தை இன்னும் முயற்சியாக நடத்து" என்பதே. இதே போன்று உலகத்தின் வெளிப்படையான கராமாத்துகள் போன்ற சில விஷயங்கள் அவருக்கு வெளியாகி அதன் பக்கம் மனம் சாயும் போது, அதன் உள்ளமை எனும் இரகசியங்கள் அவரின் மனதில் தோன்றுகிறது. அதாவது, "ஓய் ஸாலிக்கே! நாங்கள் உன்னை சோதிக்க வந்தவை(பித்னா)யாகும். எங்கள் வலையில் சிக்குண்டு கெட்டுப் போய் விடாதே! எங்களைப் பார்ப்பதை விட்டு உனது கண்ணை மூடிக் கொண்டு உனது பயணத்தில் தொடர்ந்து கொள்" என்பதே.

21. ஓய் ஸாலிக்கே! நீ அல்லாஹுத் தஆலாவிடத்தில் இரணம் போன்ற விஷயங்களைக் கேட்பது அவனின் மீது(உனக்கு) நல்லெண்ணமில்லை என்பதைக் குறிக்கிறது. அவன் நமது தேவைகளை அறியக் கூடிய ஆற்றலுள்ளவன். (அவன்) நமக்குப் பிரயோஜனமானவைகளைத் தரவும்

கெடுதியானவைகளை நீக்கவும் சக்தி பெற்றவன் என்ற நம்பிக்கை இருந்தால் அவ்வாறு கேட்க மாட்டாய்.

அல்லாஹுத் தஆலாவுடன் நெருங்கி விட வேண்டுமென்றும் திரைகள் நீங்கி அவனின் தரிசனம் உண்டாக வேண்டுமென்றும் அவனிடம் நீ கேட்பது உன்னை விட்டும் அவன் மறைந்திருக்கிறானென்பதைக் குறிக்கிறது. அவன் எப்போதும் நம்முடனிருக்கிறான் என்று (நீ) நினைத்திருந்தால் அவ்வாறு கேட்க மாட்டாய்!

மேலும் நீ அல்லாஹுத் தஆலாவிடம் அவன் அல்லாததைக் கேட்பது, அதாவது உலக விஷயங்களையோ, அல்லது பதவி-கராமத்து போன்றவைகளையோ கேட்பது அவனைப் பற்றி உனக்கு வெட்கம் இல்லையென்பதைக் காட்டுகிறது (உண்மையில் உனக்கு வெட்கமிருந்தால் அவனிடத்தில் அவன் அல்லாதவற்றைக் கேட்க மாட்டாய்!

மேலும் அல்லாஹுத் தஆலாவைத் தவிர உள்ள (மற்ற)வர்களிடம் ஏதேனுமொன்றை நீ கேட்பது அவனை விட்டும் நீ தூரமாயிருக்கிறாய் என்பதைக் குறிக்கிறது. அவன் நெருக்கமானவன் என்பதை நீ உணர்ந்திருந்தால் மற்றவைகளை தூரமானதெனத் தெரிந்திருப்பாய்! இன்னும் தூரமானவைகளை விட்டு விட்டு நெருக்கமானவனைக் கொண்டு போதுமாக்கியுமிருப்பாய். ஆகவே ஸாலிக்காயுள்ளவர்கள் எதைக் கேட்ட போதிலும் குற்றங்களேயாகும். ஆனால் "என்னிடம் கேளுங்கள்" என்ற

ஏவலுக்காகப் பணிந்து நாம் அடிமை என்ற பணிவுக்காகக் கேட்பது குற்றமல்ல.

அலலாஹுத் தஆலாவை அறிந்த ஆரிபீன்கள் எதைக் கேட்ட போதிலும்-யாரிடம் கேட்டாலும் குற்றமில்லை. ஏனெனில் அவர்கள், அல்லாஹுத் தஆலாவைத் தவிர வேறொன்றிருப்பதாக நினைக்கவில்லை. கேட்பவனுங் கூட வேறாயிருப்பதாக நினைத்துக் கேட்பதில்லை. ஆகையால் இவர்களின் கேள்வி குற்றமற்றதாகும். அவர்களில் நம்மவர்களையும் அல்லாஹுத் தஆலா ஆக்குவானாகவும். ஆமீன்.

22. உன்னில் நின்றும் வெளியாகும் ஒவ்வொரு மூச்சும் அல்லாஹுத் தஆலாவின் "குத்ரத்து" சக்தி கொண்டுதான் வெளியாகின்றது. அது நின்று விட்டால் நீ இறந்து விடுவாய். அவ்விதமான மூச்சுகளைப் பாவச் செயல்களில் உபயோகித்துக் கொள்வது பெரிய நன்றி கெட்ட செய்கையாகும். ஆகையால் ஒவ்வொரு மூச்சையும் வீணில் கழிக்காமல் அவன் வழியில் செலவிட வேண்டும். இக் கருத்து குறித்துத்தான் **"அல்லாஹுத் தஆலா அளவில் செல்லும் வழிகள் சிருஷ்டிகளின் மூச்சு எண்ணிக்கை அளவிற்கிருக்கிறது"** எனப் பெரியோர்கள் சொன்னார்கள். எனவே ஒவ்வொரு மூச்சையும் இபாதத்துகளில் கழிப்பாயாக.

23. உனக்கும், அல்லாஹுத் தஆலாவுக்குமிடையிலுள்ள திரையெனும் இருளை ஒழிப்பதிலேயே கண்ணாயிருந்து விடாதே. நீ அதிலேயே கவனமாயிருந்தால் அல்லாஹுத் த ஆலா

உன்னை எந்த வேலையில் வைத்திருக்கிறானோ அந்த வேலையில் அவனைத் தரிசிப்பது சாத்தியப்படாது நின்று விடும். ஆகவே உன்னிடம் கேட்டுக் கொள்ளப்படுவது, அல்லாஹுத் தஆலா உன்னை எந்த வேலையில் வைத்திருக்கிறானோ அவ் வேலையைச் சரிவரச் செய்து கொண்டு அதில் அல்லாஹுத் தஆலாவைச் சந்திப்பதில் கவனம் வைத்துக் கொள்.

24. இவ்வுலகில் நீ ஜீவித்திருக்கும் வரை உனது கஷ்ட நஷ்டங்களும், பலா முஸீபத்துகளும், இன்ப துன்பங்களும் இருக்கத்தான் செய்யும். இக் குணங்களனைத்தும் இவ்வுலகின் இயற்கையேயாகும். இவைகளை ஒழித்துக் கட்டி விட்டு சுகமாக வாழலாமென நினையாதே. அவ்விதம் நினைத்து கை கூடாமற் போனால் அதுவும் கவலையாகத்தான் முடியும். ஆகையால் இக் கஷ்ட நஷ்டத்தின் பக்கம் திரும்பிப் பாராமல் இடுப்பைக்கட்டி அல்லாஹுத் தஆலாவின் வழியில் நடக்கவும். மஃரிபா எனும் சூரியன் உதயமாகி அல்லாஹுத் தஆலாவை தரிசிக்குதல் ஏற்படும் போது அக் கஷ்டங்களனைத்தும் தானாகவே மறைந்து விடும். (அப்போது) அவனைக் கொண்டே நீ சுகித்திருப்பாய்!

25. அல்லாஹுத் தஆலாவினளவில் பரஞ்சாட்டி அவன் பொருட்டைக் கொண்டு பணிவுடன் ஈருலக விஷயங்களில் எதையாகிலும் நீ அவனிடம் கேட்டால் அது உனக்கு லேசாக முடியும். அவ்வாறின்றி உனது இபாதத்து, அல்லது உனது அறிவு அல்லது உனது தத்துவத்தின் பொருட்டால் அவனிடம்

நீ எதைக் கேட்டாலும் உனது புறத்திலேயே அதைச் சாட்டி விடுவான். (அப்போது) அக் காரியம் இலேசாக முடியாது. (எனவே) அவனின் மீது தவக்குல் (நம்பிக்கை) வைத்து நாட்டங்களை அவனின் பக்கமே ஒப்படைத்தால் உன் விஷயங்களை அவனே ஏற்று யாவையும் இலேசாக்கி விடுவான்; அவனே நமக்குப் போதுமானவன்.

26. ஒரு வேலையை ஆரம்பிக்கும் போதே அல்லாஹுத் தஆலாவிடம் உதவி தேடுவதும் அவன் மீது தவக்குல் வைப்பதும், அவனளவில் மீளுவதும் அவ் வேலையின் முடிவு வெற்றியாகுமென்பதற்குரிய அடையாளமாகும்.

அல்லாஹுத் தஆலாவின் வழியில் நடக்க ஆரம்பிக்கும் போதே நேரங்களை வீணாக்காமல் பலவித இபாதத்துகளைக் கொண்டும், திக்ரு, ஃபிக்ருகளைக் கொண்டும் தன்னை சுத்தப்படுத்தினால் அதன் முடிவில் தனக்கும், அல்லாஹுத் தஆலாவிற்குமிடையிலுள்ள இருளெனும் திரை நீங்கி, மஃரிபாவெனும் சூரியன் உதயமாகி பலவிதமான பிரகாசங்களைக் கொண்டும் அவன் கல்பு பிரகாசிக்கும்.

துவக்கத்தில் இபாதத்துகளும், முயற்சிகளும் குறைவாகவிருந்தால் முடிவு பிரகாசமாகாது. (ஏதோ) பிரகாசிப்பினும் இலேசாகவேயல்லாது வெளிச்சமாக இராது. முயற்சித்தவன் (பலனை) அடைந்து கொள்வான்.

27. மஃரிபா எனும் சூரியன் கல்பிலுதயமாகி மனம் பிரகாசித்திருப்பதை வெளிக்கண்ணால் காண முடியாது. அதன்

குணபாடுகள் வெளி உறுப்புகளில் தெரிந்து கொள்ளலாம். இதைக் கொண்டு ஸாலிக்கின் நிலைகளைத் தெரிந்து கொள்ளலாம். ஏனெனில் அகத்திற்கு முகம் கண்ணாடியாய் இருக்கிறது.

28. அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு மற்ற வஸ்துக்களைத் தெரிந்து கொள்கிறவர்களுக்கும், மற்றவைகளைக் கொண்டு அல்லாஹு பேரில் ஆதாரம் தேடுபவர்களுக்குமிடையில் அதிக ஏற்றத் தாழ்வு இருக்கிறது.

அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு மற்ற வஸ்துக்களைத் தெரிந்து கொண்டவர்கள் உண்மையான உள்ளமை அல்லாஹுத் தஆலாவிற்கே உரித்தானதென்றும், மற்றவைகளின் உள்ளமை அல்லாஹுத் தஆலாவின் உள்ளமையில் நின்றுமுள்ளது; அவைகளுக்குத் தனி உள்ளமை இல்லையென்றும் தெரிந்து கொள்வார்கள்.

அல்லாஹுத் தஆலாவின் மீது ஆதாரம் தேடுவது அவனளவில் நெருங்காததினாலேயாகும். அவ்வாறில்லாவிடில் அவன் மீது ஆதாரம் தேடுவதற்கு அவன் எப்போது மறைந்தான்? **"நாம் உங்களின் பிடரி நரம்பைப் பார்க்கினும்(சமீபம்) உங்களில் நெருங்கி இருக்கிறேன்"** என அவனே கூறுகிறான். மற்ற வஸ்துக்களைக் கொண்டு ஆதாரம் தேடி அவைகள் உங்களை அவனளவில் சேர்க்க அவன் எப்பொழுது தூரமானான்? **"நீங்கள் எங்கிருந்தாலும் நான் உங்களுடனேயே இருக்கிறேன்"** என்று அவனே குர் ஆனில் கூறுகிறானே!

"சொந்த நிலையில்லாத வஸ்துக்கள் சொந்த நிலையுள்ளவன் அளவில் சேர்த்து விடுமென்று நினைப்பது ஆச்சரியமாயிருக்கிறது."

29. "வேற்றுமை" எனும் சிறைச்சாலைகளை விட்டு "ஏகத்துவமென்ற" மைதானில் புறப்பட்டு அல்லாஹுத் தஆலாவினளவில் "சேர்தல்" எனும் ஜெயம் பெற்ற சீமான்கள் தங்கள் மஃரிபா எனும் சீமான்தனத்தை அல்லாஹ் வழியில் சென்று கொண்டிருக்கிற "ஸாலிக்"கென்னும் ஏழைகளுக்குச் செலவு செய்யவும்!

30. அல்லாஹுத் தஆலாவினளவில் செல்லுகின்ற ஸாலிகீன்கள், "ஷரீஅத்து–தரீகத்து" எனும் பிரகாசத்தைக் கொண்டு ஜெயம் பெற்றார்கள். அல்லாஹுத் தஆலா அளவில் சேர்ந்தவர்களுக்கு "ஹகீகத்"தெனும் பிரகாசம் உண்டாகியிருக்கிறது.

முந்தியவர்(ஸாலிகீன்)கள் பிரகாசத்துக்காகவும், (பிந்திய) இவர் (அல்லாஹ் அளவில் சேர்ந்தவர்)களுக்காக பிரகாசமும் (உண்டாகி)இருக்கின்றது. ஏனெனில் இவர்கள் அல்லாஹுத் தஆலாவிற்காக உள்ளவர்கள்.

அல்லாஹுத் தஆலா, "நீ "அல்லாஹ்" என்று சொல்! **மற்றவர்களை விட்டுவிடு; அவர்கள் தங்கள் பாத்திலான விஷயங்களில் மூழ்கி விளையாடட்டும்"** எனக் கூறுகிறான். அதாவது, நீங்கள் உங்கள் கல்புகளைக் கொண்டு அல்லாஹ் என்று சொல்லியவர்களாய், அல்லாஹ் அல்லாத(மற்றெல்லா) வஸ்துக்களை விட்டும் மறைந்து விடுங்கள் மற்ற ஜனங்களை

விட்டு விடுங்கள்; அவர்கள் தங்கள் ஆசைகளில் விளையாடியவர்களாய் வேற்றுமையில் மூழ்கிக் கொள்ளட்டும்!

அல்லாஹ்வினளவில் சேர்ந்தவர் (வாஸிலீன்)கள் எல்லாவற்றையும் விட்டு (ஒதுங்கி) அல்லாஹ்வைக் கொண்டு அல்லாஹ்விற்காக இருப்பதால் பிரகாசங்கள் அவர்களுக்காக இருக்கின்றன என்ற கருத்தை முந்திய ஆயத்து காட்டுகிறது.

31. ஓ ஸாலிக்கே! அல்லாஹுத் தஆலாவின் இரகசியங்கள், கராமத்துகள் போன்ற மறைவான விஷயங்களை நீ ஆராய்வதை விட உன்னில் மறைந்து கிடக்கின்ற பெருமை, முகஸ்துதி, கீர்த்தி போன்ற கெடுதிகளை ஆராய்ந்து அவைகளை உன்னை விட்டு நீக்க முயற்சிப்பது மேலானதாகும். இக் குறைகளிருக்கவே அல்லாஹுத் தஆலாவின் இரகசியங்கள் வெளியாக வேண்டுமென்றும், கல்பு பிரகாசிக்க வேண்டுமென்றும் கராமத்துண்டாக வேண்டுமென்றும் ஆசிப்பது கெட்ட நப்ஸின் இச்சைகளாயிருக்கும். இந்த ஆசை உனது (உபூதிய்யத்) அடிமைத்தனத்திற்கு பங்கமிளைக்கக் கூடியதாய் இருக்கிறது. ஆகவே, "நீ செம்மையாயிருப்பதைத் தேடு; கராமத்தைத் தேடாதே!" என பெரியோர்கள் சொன்னார்கள்.

32. அல்லாஹுத் தஆலா மறைந்த(மறைக்கப்பட்ட)வனல்ல! அவனைப் பார்க்கிறதை விட்டும் நீ தான் மறைக்கப் பட்டவன்! ஆகையால் அவனைப் பார்க்க வேண்டுமென்றும்–அவனைச் சேரவேண்டுமென்றும் நீ நினைத்தால் உனது கல்பின் கெடுதிகளை ஆராய்ந்து வைத்தியம் செய்து கொள்.

அப்போது அவனளவில் சேர்வாய்! உன் அகக் கண்ணால் அவனை தரிசிப்பாய்!

அவனை ஒரு வஸ்து மறைத்துக் கொள்வதாயிருந்தால் மறைக்க ஒரு திரை வேண்டும். அவ்வாறு திரையிருந்தால் அவனின் உள்ளமைக்கு ஒரு மட்டு(அளவு) திட்டம் வேண்டும். அவ்வாறு மட்டுத் திட்டமிருந்தால் அவன் அவ் வஸ்துகளுக்குக் கட்டுப்பட்டவனாகி விடுகிறான். ஆனால், அவன் "**அவனின், அடியார்களை அடக்கி ஆளுபவன்**" என்று குர்ஆனில் கூறுகிறான். ஆகையால், "அவன் மறைந்தவனல்ல!" நீ தான் மறைந்தவன்! எனவே, உன்னை நீ பக்குவப்படுத்திக் கொள்! அவனைக் காண்பாய்!

33. அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்தில் முடுகுவதற்காகவும்–அவனின் அழைப்பிற்கு ஜவாபு சொல்வதற்காகவும்–உனது அடிமைத்தனத்திற்கு பங்கமுண்டாக்கக் கூடிய கெட்ட மனித குணமனைத்தையும் விட்டு சுத்தமாயிருந்து கொள்!

34. பாவங்களுக்கும் அல்லாஹுத் தஆலாவை மறக்குதலெனும் மதிமயக்கத்திற்கும்–கெட்ட இச்சைகளுக்கும் மூல காரணம் தன்னைத் தான் (தன் செய்கைகளை) பொருந்திக் கொள்வதாகும். அவ்விதம் பொருந்திக் கொள்வதால் தன்னுடைய துர்ச் செயல்களை நன்மையாகப் பாவிக்கிறான்; தன் குறைகளை மறைத்துக் கொள்கிறான். எல்லா வழிப்பாடுகளுக்கும்–அல்லாஹுத் தஆலாவை மறவாமல் உணர்வாயிருப்பதற்கும்–பாவ கருமங்கள் செய்யாதிருப்பதற்கும்

மூல காரணம் தன்னைக் கொண்டு தான் பொருந்திக் கொள்ளாமலிருப்பதாகும். அவ்விதம் பொருந்தாமலிருந்தால் தன் செயல்களில் பெருமைப்படாமல் எப்போதும் அல்லாஹ்வின் நாட்டத்திலும் தேட்டத்திலும் உணர்வோடும் இருப்பான்.

35. தன்னைத் தான் பொருந்திக் கொள்ளும் ஒரு ஆலிமின் சிநேகத்தைப் பார்க்கினும்–தன்னைத் தான் பொருந்திக் கொள்ளாததொரு ஜாஹிலின்(அறிவிலியின்) சிநேகம் மேலானதாகும்.

தன்னைத் தான் பொருந்திக் கொள்ளும் ஆலிமிற்கு(உள்ள திறமை)என்ன? இல்மு(அறிவு) இருக்கிறது. வேறு ஒன்றுமில்லை.

தன்னைத் தான் பொருந்திக் கொள்ளாத ஜாஹிலிற்கு (உள்ள கேடு)என்ன? ஜஹ்லு(அறிவின்மை) இருக்கிறது. (ஆயினும் வேறு) ஒரு ஜஹ்லுமில்லை. எனவே இவ்விதமானவர்களோடு கலந்துறவாடுவதில் எவ்வித தீமையும் ஏற்படாது. (ஆனால் தன்னைத் தான்) பொருந்திக் கொண்ட ஆலிமோடு உறவாடுவதினால் தீங்கே அல்லாது நன்மை அணுகாது.

36. அகப் பார்வையின் சுடர்(இல்முல் எகீன்) உன்னோடு அல்லாஹுத் தஆலா இருக்கிறானென்பதை உனக்கு அறிவிக்கும்.

"நூருல் இல்மு" என்று சொல்லத்தக்க "அய்னுல் எகீன்" எனும் அகப்பார்வை "அல்லாஹுத் தஆலா தான் உண்மையில் உள்ளவன்; மற்றவைகளனைத்தும் தோற்றமே அல்லாது

உண்மையில் அவைகளுக்கென ஒரு தனி உள்ளமையில்லை" என்பதைக் காட்டும்.

"நூருல்ஹக்கு" என்று சொல்லக் கூடிய "ஹக்குல் எகீன்" எனும் உண்மை அகப்பார்வை அல்லாஹுத் தஆலாவின் உள்ளமையைக் காண்பிக்கும். மற்றவைகளின் உள்ளமையையோ-இல்லாமையையோ காண்பிப்பதில்லை. அதாவது இரண்டும் காணாதவனாவான்.

முந்திய அறிவு ஏற்படும் போது அல்லாஹுத் தஆலா விலக்கிய வஸ்துக்களின் பக்கம் அண்டவே மாட்டான்; ஏவப்பட்டவைகளில் ஒன்றையும் விடமாட்டான். எதைச் செய்தாலும் அல்லாஹுத் தஆலா நம்மைப் பார்த்துக் கொண்டே இருக்கிறானென நினைத்து எப்போதும் அவனை அஞ்சியேயிருப்பான்.

இரண்டாம் அறிவு வெளியாகும் போது உண்டானவைகளனைத்தும் "அல்லாஹுத் தஆலாவின் தோற்றமேயல்லாது வேறொன்றுமில்லை" எனத் தெரிந்து கொண்டு அவனின் பக்கமே பரஞ்சாட்டி, அவன் செய்கையடங்கலுக்கும் தலைசாய்த்துப் பொருந்தி பூரணமான தவக்கலுடன் இருப்பான்; மற்றவைகளின் பக்கம் எவ்வித நினைவோ-பிரியமோ இருக்காது.

மூன்றாம் தெளிவு உண்டாகுமிடத்தில் அல்லாஹுத் தஆலாவின் தாத்தில்(உள்ளமையில்) பூரணமாக(ஐக்கியமாய்) அழிந்து விடுகிறான்.

அல்லாஹுத் தஆலாவுடன் ஒன்றும் இல்லாமல் தானாக இருந்தான். இப்போதும் அவன் இருந்தபடியே இருக்கின்றான் என்ற திடத்தோடு இருப்பான்.

37. ஓ ஸாலிக்கேஸ உனக்கு ஏதேனுமொரு காரியம் நிறைவேற வேண்டுமென்று நினைத்தால் அக்காரியத்தை சங்கை பொருந்திய அல்லாஹுத் த ஆலாவிடம் கேள்! பிறரிடம் கேட்காதே! உன் எந்த மேலெண்ணமும் சங்கை பொருந்திய அல்லாஹ்வை விட்டும் கடந்து விடாது. (நீ) பிறரிடம் நம்பிக் கேட்பது அடிமைத்தனத்திற்கு முரணாகும். ஆனால் பிறரிடம் கேட்கும் போது இவர் மூலமாக அல்லாஹுத் தஆலாதான் தருபவனென்றும், கிடைக்கும் போது அல்லாஹுத் தஆலாதான் தந்தானென்றும் எண்ணம் வைத்தால் அவ்விதம் கேட்பது குற்றமில்லை; பிறரிடம் கேட்டால் இந்த எண்ணத்தோடுதான் கேட்க வேண்டும். அதாவது, வெளித் தோற்றத்தில் கேள்வி பிறரிடமிருப்பிருப்பினும் உண்மையில் அக் கேள்வி அல்லாஹுத் தஆலாவிடமாயிருக்க வேண்டும்.

இது போன்றே உனக்கு ஏதும் கஷ்ட-நஷ்டங்கள் ஏற்பட்ட போதிலும் அதை நீக்க பிறரிடம் கேளாதே! அக் கஷ்ட-நஷ்டங்களை உனக்கு ஏற்படுத்தியவன் அல்லாஹுத் தஆலா. அதை பிறர் எவ்விதம் நிவர்த்திப்பர்? அது மட்டுமல்ல.

தனக்கேற்பட்ட கஷ்ட்டத்தைத் தடுக்க இயலாதவர் பிறருக்கேற்படுவதை எப்படித் தடுப்பர்? (எனவே)இதற்கும் மேற்சொன்ன முறைபோல் "பெயரளவில் பிறரிடம் கேட்பினும்

உண்மையில் அல்லாஹுத் தஆலாவிடமே கேட்கிறோம்" என்று தான் நினைப்பு வேண்டும்.

எது போன்றெனில், நாம் ஒரு கம்பைக் கொண்டு ஒருவரை அடித்தால் வெளியில் அக் கம்புதான் அவரை அடித்தது; என்றாலும் உண்மையில் கம்பைக் கொண்டு இன்னவர் அடித்தாரென்று சொல்வார்களேயல்லாது "கம்பு அடித்தது" என்று சொல்வதில்லை. இது போன்றே ஒரு மருந்து குடித்து வியாதி சுகப்பட்டாலோ அல்லது ஒரு மனிதன் மற்றொருவருக்கு ஏதெனுமொரு உபகாரம் புரிந்தாலோ அம் மருந்தின் பொருட்டால் அல்லாஹுத் தஆலா சீக்கைப் போக்கினான் என்றும் அம் மனிதன் மூலம் அல்லாஹுத் தஆலா உபகாரம் செய்தான் என்று தான் எண்ண வேண்டும்.

38. அல்லாஹுத் தஆலாவின் அழகிய குணங்களால் உனக்கு அவன் மீது நல்லெண்ணம் ஏற்படாவிட்டால் அவன் உனக்குச் செய்த பலவித நன்மைகளை நினைத்தாகிலும் அவன் மீது நல்லெண்ணம் வைத்துக் கொள்! அவன் உனக்கு நன்மையும்–உபகாரமுமல்லாது செய்வானா?

அதாவது அல்லாஹுத் தஆலா மீது நல்லெண்ணம் கொள்வதில் மனிதர்கள் இருவகைப் படுவார்கள். சில மனிதர்கள் அல்லாஹுத் தஆலாவின் நல்ல குணங்களை மட்டும் நினைத்து நல்லெண்ணம் கொள்வர். சில மனிதர்கள் அல்லாஹுத் தஆலா அவர்களுக்குச் செய்த உபகாரத்தை நினைத்து நல்லெண்ணம் கொள்வர். ஆகவே நீ முந்திய கூட்டத்தில் சேர்ந்தவனாயிருக்க முயலவும்.

39. அல்லாஹுத் தஆலா ஒரு போதும் ஒன்றை விட்டும் பிரிவதில்லை. அப்படிப் பட்டவனை விட்டு விட்டு அவனோடு நிலைபாடில்லாத துன்யாவைத் தேடி (நீ) ஓடுகிறது ஆச்சரியத்திலும் பெரிய ஆச்சரியமாய் இருக்கிறது. அவ்வாறு ஓடுபவனின் வெளிக் கண் குருடு இல்லாவிட்டாலும் மனக்கண் குருடாகத்தான் இருக்கும். ஏனெனில் எப்போதும் நிலைத்திருக்கக் கூடியவனை விட்டு விட்டு அழிந்து போகும் துன்யாவைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். இவ்வாறு செய்வது அகக் கண் குருடாயிருப்பதன் அடையாளமாகும்.

40. ஒரு உலகத்திலிருந்து வேறொரு உலகிற்கு பிரயாணம் போகாதே. அவ்வாறு போவது செக்கில் பூட்டப்பட்ட கழுதைக்குச் சமானமாகும். அக்கழுதை இரவு பகலாக நடந்த போதிலும் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேர்கிறது. ஆகையால் நீ உலகத்திலிருந்து பிரயாணப்பட்டு உலகத்தைப் படைத்த அல்லாஹுத் தஆலாஅளவில் பியாணப்பட்டுப் போகவும்! (அவ்விதம் சென்றால்) நிச்சயமாக உன்னுடைய முடிவு உன்னுடைய ரப்பளவில் தான் போய்ச் சேரும்.

நீ இந்த உலக இச்சைகளைத் துறந்து விட்டு கஷ்டப் பட்டு "இபாதத்" செய்கையில் கீர்த்தி வேண்டும். அல்லது பெரிய பதவிகள் வேண்டும்! கராமத்துகள் வேண்டுமென்றும் நினைப்பது ஒரு உலகை விட்டு வேறொரு உலகுக்கு பிரயாணமாவது போன்றாகும்.

அல்லது அவ்விதம் துன்யாவை வெறுத்து இபாதத்துச் செய்கையில் "சுவர்க்கம்" வேண்டும், அதிலுள்ள பற்பல

சுகங்கள் வேண்டுமென்று நினைப்பதுவும் வேறொரு உலகை நாடுவதாகும். ஏனெனில் சுவர்க்கமும்-நரகமும் அல்லாஹுத் தஆலாவின் சிருஷ்டிதானாகையால் அல்லாஹுத் தஆலாவையே நாடி (இபாதத்) செய்ய வேண்டும்! வேறெந்த நோக்கமும் இருக்கக் கூடாது.

நாயகம்(ஸல்) அவர்களின் சொல்லைக் கவனி! ஒருவரின் ஹிஜ்ரத்து (ஒன்றைவிட்டு மற்றொன்றை நாடிச் செல்வது) அல்லாஹ் அளவிலும் அவனது ரசூலளவிலுமிருந்தால் அவனது ஹிஜ்ரத்து அல்லாஹ் அளவிலும், அவனது ரசூலின் அளவிலும் தான் (முடியும்). ஒருவனின் ஹிஜ்ரத்து துன்யா அளவிலிருந்தால் (அவன்) அதையே பெற்றுக் கொள்வான். அல்லது ஒரு பெண்ணினளவிருந்தால் அவளை(அவன்) கட்டிக் கொள்வான். ஆகவே ஒருவனின் ஹிஜ்ரத்து எதனளவிலிருக்கிறதோ அதனளவில் தான் அவனது ஹிஜ்ரத்தும்(முடியும்.)

உனக்கு விளங்கும் தன்மையிருந்தால் மேற் கூறிய ஹதீதை சிந்தித்துப் பார்.

அதாவது அல்லாஹுத் த ஆலாவையும் அவன் ரஸூலையும் நாடிச் சென்றால் அவர்களைப் பெற்றுக் கொள்ளலாம். மற்றொன்றை நாடினால் அது(வும்) கிடைக்கும். ஆனால் அது ஒரு சிருஷ்டியை விட்டு இன்னொரு சிருஷ்டி அளவில் செல்வதாகும். எனவே அல்லாஹ்வையே நாடு!

41. அல்லாஹுத் தஆலாவைப் பற்றி உணர்த்தும் நடத்தை இல்லாதவரோடும்-அவனை அறிவிக்கும் பேச்சுகள்

பேசாதவரோடும் நீ சிநேகம் வைக்காதே! அது ஆலிமானாலும் சரி! ஆபிதானாலும் சரி! இவர்களின் நோக்கம் அல்லாஹ் அல்லாத சிருஷ்டிகளேயாகும்.

அல்லாஹுத் தஆலாவை அறிவிக்கும் தன்மையும் பேச்சுமிருந்தால் அவர் அல்லாஹ்வையே நாடுபவராயிருப்பார். நமக்கும் அறிவிப்பார். ஆகையால் இவ்விதமானவர்களுடன் சேர்ந்து கொள்! உன்னைப் பார்க்கிலும் மோசமான நிலையுள்ளவரோடு சேர்ந்தால் நீ கெட்டவனாக இருந்த போதிலும்–உன்னிலுள்ள நன்மைகளைச் சொல்லிக் காண்பித்து உனது நப்ஸின் பேரில் பொருந்தச் செய்து உன்னை (மேலும்) கெடுத்து விடுவான். ஆகவே அவ்விதமானவனின் சமீபத்திலும் கூட நெருங்காதே!

42. துன்யாவோடு பற்றில்லாதவர்களின் இபாதத்துகள் தோற்றத்தில் குறைவாக இருந்தபோதிலும் அந்தரங்கத்தில் அது ஜாஸ்தியும் அதிக பலனுள்ளதுமாகும்.

துன்யாவோடு அதிக பற்றுள்ளவர்களின் அதிகமான இபாதத்தும் உண்மையில் கம்மியும் பலன் குறைந்ததுமாகும். ஏனென்றால் இவனில் இபாதத்துகளைக் கெடுக்கக் கூடிய பொருளாசை, முகஸ்துதி, பெருமை போன்றவைகள் ஏற்படுகின்றன. தூய்மையான மனதோடு அல்லாஹுத் தஆலாவின் பக்கம் முன்னோக்குவதில்லை. ஆகவே பலன் குறைகிறது.

43. நல்ல அமல்கள் செய்வது மனநிலை தூய்மையாயிருப்பதின் பிரயோஜனமாயிருக்கும். மன நிலை

*அழகாயிருப்பது அவனை அல்லாஹுத் தஆலா மன நிம்மதியான (மகாமில்) அந்தஸ்தில் சேர்த்து விட்டான் என்பதற்குரிய அடையாளமாகும். இதனைப் பற்றித் தான் நாயகம்(ஸல்) பின் வருமாறு கூறினார்கள்.*

***"திண்ணமாக திரேகத்தில் ஒரு சதைக்கட்டி இருக்கிறது. அது நல்லதாய் இருந்தால் திரேகம் அடங்கலும் நல்லதாகி விடும். அது கெட்டு விட்டால் திரேகமடங்கலும் கெட்டு விடும். அது கல்பாய் இருக்கும். அறியவும்"***

*மஃரிபா வெனும் மன நிம்மதியான அந்தஸ்தில் அல்லாஹுத் தஆலா அவனைச் சேர்த்துக் கொண்டானென்பதற்கு அடையாளம் எல்லோரிடமும் நற்குணமாயிருப்பதும் – வெளிரங்கத்திலும் –உள்ரங்கத்திலும் அதபாயிருப்பதுமாகும்.*

44. *திக்ரு செய்யும் போது கல்பில் அல்லாஹுத் தஆலாவின் நினைவு உண்டாகவில்லை என்று திக்ரை விட்டு விடாதே! மனதில் நினைவு வராவிட்டால் நாவிலாவது திக்ரு செய்து கொள்வது, நாவாலும், மனதாலும் திக்ரை விடுவதைப் பார்க்கிலும் மேலானதாயிருக்கும். நினைவில்லாமல் நாவால் திக்ரு செய்தால் நினைவோடு திக்ரு செய்வதற்குரிய வாய்ப்பை அல்லாஹுத் தஆலா தரக் கூடும். நினைவோடு திக்ரு செய்தால் உணர்வோடும்–உணர்வோடு திக்ரு செய்தால் அல்லாஹ் அல்லாதது அடங்கலையும் மறந்து அவனை மட்டும் நினைத்து திக்ரு செய்வதற்கும் வாய்ப்பளிப்பான். இவ்வாறு செய்வது அல்லாஹுத் தஆலா மீது பெரிய பிரமாண்டமான*

*காரியம் அல்ல! ஸாலிக்குகளுக்கு அல்லாஹுத் தஆலாவை இவ்வாறு "திக்ரு" செய்வது முக்கிய கடமையாக இருக்கிறது.*

***"என்னை திக்ரு (ஞாபகம்) செய்யுங்கள், உங்களை நானும் திக்ரு செய்கிறேனென்றும்; ஈமான் கொண்டவர்களே! அல்லாஹுத் தஆலாவை மிகுதமாக திக்ரு செய்யுங்கள்"*** *என்றும் அல்லாஹுத் தஆலா குர்ஆனில் கூறுகிறான். மிகுதமான திக்ரென்றால் ஒருபோதும் அவனை மறக்காமலிருப்பதாகும்.*

*குதுஸியான ஹதீஸில் "என்னுடைய அடிமை என்னை நினைக்குமிடத்தில் நான் இருக்கிறேன். என்னை திக்ரு செய்யும் போது நான் அவனுடனிருக்கிறேன். என்னை அவன் நப்ஸில் (மனதில்) திக்ரு செய்தால் அவனை நானும் என் நப்ஸில் திக்ரு செய்கிறேன். என்னை அவன் ஒரு கூட்டத்தில் திக்ரு செய்தால் அக்கூட்டத்தைப் பார்க்கிலும் மேலான கூட்டத்தில் அவனை நான் திக்ரு செய்வேன். அவன் என்னளவில் ஒரு சாண் முடுகினால் அவனளவில் நான் ஒரு முழம் முடுகுவேன். என்னளவில் அவன் ஒரு முழம் முடுகினால் அவனளவில் நான் ஒரு பாகம் முடுகுவேன் என்னளவில் அவன் நடந்து வந்தால் அவனளவில் நான் ஓடிப்போவேன்" என்று அல்லாஹ் கூறுகிறான். இந்த ஹதீஸ் ஸஹீஹ் என்பதாக எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதாகும். சிந்தனையாளர்களுக்கு திக்ரின் அவசியம் பற்றி மேற்கூறிய ஆயத்தும்-ஹதீஸும் போதுமென்றெண்ணி இத்தோடு நிறுத்தப் பெற்றது.*

45. "அல்லாஹுத் தஆலாவின் வழிப்பாடு" எனும் இபாதத்துகள் உனக்குத் தவறிப்போனதில் நீ கவலைப்படாமலிருப்பதும், பாவ கரியங்களைச் செய்வதில் கை சேதப்படாமலிருப்பதும் கல்பு மௌத்தாகி விட்டதென்பதற்கு அடையாளமாகும்.

46. அல்லாஹுத் தஆலா மீதுள்ள நல்லெண்ணத்தைப் போக்கி ஆசை முறிவை வருத்துகிற அளவிற்கு பாவங்களைப் பெரிதாகப் பாவிக்க வேண்டாம். ஏனென்றால் அல்லாஹுத் தஆலாவை அறிந்து கொண்டவன் அவனுடைய பெருந்தன்மையின் கீழ், பாவத்தை இலேசாகக் காண்பான். அதாவது, அவனுடைய மன்னிப்பு என்ற தன்மை எந்த பாவத்தையும் பொருத்துக் கொள்ளும் என்பதை அறிவான். அல்லாஹுத் தஆலாவின் நீதமெனும் தன்மை உன்னை எதிர் நோக்கி விட்டால் எந்த பாவமும் இலேசானதல்ல. அவனுடைய கிருபை-இரக்கம் எனும் தன்மை உன்னை நோக்கிவிட்டால் எந்தப் பாவமும் பெரிதல்ல. நாடினால் எந்த வஸ்துகளையும் நன்கொடையாகக் கொடுப்பான். ஆகையால் அவன் மீது ஆதரவு அற்றவனாகி விடாதே. முயற்சியுடன் அவன் வழியில் நடந்து கொள்.

47. இபாதத்துகள் செய்யும் போது எனது தத்துவத்தினால் செய்கிறேனென்று நினையாமல் அல்லாஹுத் தஆலாவின் தத்துவத்தினால் தான் செய்கிறேன்; அவன் தத்துவமில்லாவிடில்(என்னால்) எதுவும் செய்ய முடியாது என்று எண்ணி தன்னை மறந்து செய்யும் இபாதத்துகள் தான்

அல்லாஹுத் தஆலாவிடம் ஒப்புக் கொள்ளப்படுவதற்கும்- மனசுத்தி ஏற்படுவதற்கும் அருகதையான வணக்கமாகும். அத்துடன் எவ்வளவு அதிகமாக வணக்கம் புரிந்த போதிலும் அவைகளை மிகக் குறைவாகக் கருதுவான்.

48. அல்லாஹுத் தஆலா தனது கிருபாக் கடாட்சத்தால்- நன்கொடையாக உனக்கு கல்பு பிரகாசிக்கும் அறிவுகளைத் தருகிறான். அது எதற்கெனில், அந்த அறிவினால் நீ அவனளவில் முன்னோக்கவும்-உன்னை வேற்றுமை என்ற வலையை விட்டும் இரட்சிக்கவும்-துன்யாவின் ஆசாபாசங்கள் என்ற அடிமைத்துவத்திலிருந்து உன்னை விடுவிக்கவும் அல்லாஹுத் தஆலாவைத் தரிசிக்க விடாமல் தடுத்துக் கொண்டிருக்கும் உனது கெட்ட குணங்கள் எனும் ஜெயிலிலிருந்து, அவனைத் தரிசிக்குதல் எனும் மைதானத்திற்கு புறப்படவுமேயாகும்.

உனக்கு ஒரு உள்ளமை உண்டென்று நினைப்பதே ஜெயிலாகும். அதைவிட்டு வெளி வந்து விட்டால் பார்ப்பதடங்கலும் அல்லாஹுத் தஆலாவின் ஜோதியாகும். "எங்கு பார்த்தாலும் அல்லாஹுத் தஆலாவின் "தாத்து"தான் இருக்கிறதென்று அவனே குர்ஆனில் கூறுகிறான்.

ஈமானின் பிரகாசங்கள் கல்புடையவும் ஸிர்ருடையவும் ஏறுவாகனங்களாயும், தௌஹீது(ஏகத்துவம்), எகீன் என்பதின் பிரகாசங்கள் கல்பின் படைகளாயும் இருக்கும்.

ஷக்கு(சந்தேகம்), ஷிர்க்கு(இணைவைத்தல்) எனும் இருள்கள் நப்ஸின் படைகளாயிருக்கும்.

அல்லாஹுத் தஆலா தனது அடிமைகளுக்கு உதவி செய்ய நாடினால் பிரகாசமெனும் படைகளைக் கொண்டு உதவி புரிந்து, இருள்–வேற்றுமை எனும் படைகளைத் தோற்கடித்து விடுவான். (அப்போது) அந்த அடிமைகள் பிரகாசமெனும் வாகனத்திலேறி அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்திற்குச் செல்வார்கள்.

நூர் என்ற பிரகாசம் மறைவான விஷயங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும். அகப் பார்வை அப் பிரகாசம் கண்டு கொண்ட விஷயங்களைச் சரி அல்லது தவறு என்று தீர்ப்பளிக்கும். கல்பு அந்தத் தீர்ப்புக்கு அனுசரணையாக, "நல்லது" என்று தீர்ப்பளித்தால் அதைச் செய்யவும், "கெட்டது" எனத் தீர்ப்பளித்தால் அதைப் புறக்கணிக்கவும் எத்தனிக்கும்.

50. உன்னில் நின்றும் ஒரு இபாதத்தேற்பட்டால் அது உன்னுடைய தத்துவத்தினால் நீயாகவே செய்த இபாதத்து என்று நினைத்து சந்தோஷப் படாதே! அவ்வாறு சந்தோஷிப்பபது கெட்ட சந்தோஷமாகும். அது அல்லாஹ்வின் புறத்தால் உன்னில் வெளியான இபாதத்து என்றும் அவனின் தத்துவத்தால் ஏற்பட்டது என்றும் நினைத்து சந்தோஷம் அடைந்து கொள்! அது அல்லாஹுத் தஆலாவின் கிருபையாலும் உதவியாலும் ஏற்பட்டது. ஆகவே அதைக் கொண்டே அவர்கள் சந்தோஷிக்கட்டும்! அந்த சந்தோஷமானது அவர்கள் சேகரித்துக் கொண்டதைப் பார்க்கிலும் மேலானது என்று சொல்! என்பதாக அல்லாஹுத் தஆலா குர்ஆனில் கூறியிருக்கிறான்.

51. அல்லாஹுத் தஆலாவுக்காக அவன் வழியில் நடப்பவர்களையும்–அவனளவில் சேர்ந்தவர்களையும், அவரவர்கள் செய்யும் வெளிப்படையான இபாதத்துகளை விட்டும் அந்தரங்கமான இபாதத்துகளை விட்டும் அல்லாஹுத் தஆலா அவர்களை மறைத்துக் கொண்டான். எனவே அவர்கள், தான் செய்ததாக எதையும் காண மாட்டார்கள். ஸாலிக்கு வழி நடப்பவர்கள் தான் செய்ததாகக் காணாதது ஏனெனில், தான் செய்த இபாதத்துகள் குற்றமற்றவைகளோ–கலப்பற்றவைகளோ– அல்லாஹுத் தஆலா ஒப்புக் கொள்ளுவானோ–ஒப்புக் கொள்ள மாட்டானோ என்ற விஷயம் உறுதிப்படாததினால், தான் செய்ததாகப் பாவித்துப் பெருமை கொள்ளமாட்டார்கள்.

அல்லாஹுத் தஆலா அளவில் சேர்ந்தவர்கள் அல்லாஹுத் தஆலாவுடன் மற்றொன்றைக் காணமாட்டார்கள். அவனுடன் மற்றொன்று உண்டாயிருப்பது முடியாதென்று தெரிந்து கொண்டதால் எதைச் செய்தாலும் அவன் அல்லாது தான் செய்ததாக அவர்கள் அறிய மாட்டார்கள். இது இவர்களுக்கு அல்லாஹுத் தஆலா செய்த ஒரு நிஃமத்தாகும்.

52. பேராசை எனும் வித்திலேயல்லாது கேவலம் என்னும் செடிகள் முளையாது; ஆகவே பேராசையுள்ளவன் கேவலமடைவான். ஏனென்றால் ஒரு வஸ்துவிற்கு ஆசைப்படும் போது அவ் வஸ்துவையுடையவனுக்கு பணியவும், மனம் அவனின் பக்கம் சாயவும், அவனைக் கொண்டு மனம் கொழுகவும் ஆரம்பிக்கிறது. இது அல்லாஹுத் தஆலாவிற்கு

அடிமையாயிருப்பதற்கு முரணாகி விடுகிறது. ஆகவே இவன் அல்லாஹுத் தஆலாவிடத்திலும் – மனிதனிடத்திலும் கேவலமானவனாய் ஆகிவிடுகிறான்.

உன்னைப் பேராசையளவில் இழுப்பதற்கு வஹ்மை(தீய நினைப்பை)ப் போல விரோதி வேறெதுவுமில்லை. நீ ஏதேனுமொன்றின் மீது ஆசைப் பட்டால், அவ்வஸ்துவிற்கு நீ அடிமைப்பட்டு விட்டாய்! அவ்வஸ்துவை விட்டும் ஆசை நீங்கிவிட்டால் சுதந்திரவானாய் ஆகி அவ்வஸ்துவை விட்டு மனம் அல்லாஹ்வின் பக்கம் திரும்பி அவனுக்கு அடிமையாகி விடுவாய்!

53. பலவகையான இஹ்ஸான்களை(இபாதத்துகளை)க் கொண்டு ஒருவன் அல்லாஹுத் தஆலா அளவில் முன்னோக்காவிட்டால் பலவிதமான சோதனை எனும் விலங்குகளைக் கொண்டு அவனை அல்லாஹ் தன்னளவில் இழுப்பான்.

அதாவது, ஒரு மனிதன் தனக்கு அல்லாஹுத் தஆலா செய்த உபகாரங்களை நினைத்து நன்றி செலுத்தி அவனுக்குத் தலைசாய்த்து இபாதத்துச் செய்து அவனளவில் சேர முயற்சிக்காது போனால் பலவித கஷ்ட நஷ்டங்களையும், சீக்கு, பிணிகளையும் கொண்டு சோதிப்பான். அப்போது அம்மனிதன் அல்லாஹுத் தஆலா அளவில் மனமுருகி, அழுது, தொழுது துன்யா ஆசாபாசங்களை விட்டு அல்லாஹுத் தஆலாவினளவில் மீளுவான். இதைப் பார்க்கும் போது துன்பங்கள் வெளிப்படையில் கஷ்டமாகத் தோன்றினாலும்

உண்மையில் அதுவும் ஒரு நிஃமத்தாகும். ஏனெனில் முரண்பட்ட மனிதர்களை (இவை) அல்லாஹுத் தஆலா அளவில் சேர்த்து விடுகின்றன.

54. அல்லாஹுத் தஆலாவின் நிஃமத்துகளுக்கு ஒருவன் நன்றி செய்யாவிட்டால், அந்த நிஃமத்துகளை தன்னை விட்டும் நீக்கிக் கொள்வதற்கு முயற்சித்து விட்டான். அதற்கு ஒருவன் நன்றி செய்தால் அதன் கால்களைக் கட்டி வைத்துக் கொண்டான். அதாவது நன்றி செய்தால் அந்த உபகாரங்கள் தன்னை விட்டும் போகாது. அது மட்டுமல்ல, நன்றி செய்யச் செய்ய உபகாரங்களும் அதிகமாகும்.

55. நீ அல்லாஹுத் தஆலாவுடன் மரியாதைக் குறைவாக நடக்க அதாவது பாவங்கள் செய்து கொண்டும், இபாதத்துகள் செய்யாமலிருக்க அவன் உனக்கு உபகாரங்கள் செய்து கொண்டிருப்பதைப் பயப்படு! ஏனெனில் அவ்வாறு செய்வது உன்னை அவன் விட்டுப் பிடிப்பதாயிருக்கக் கூடும். **"அவர்கள் அறியாவிதமாக அவர்களை நாம் விட்டுப் பிடிப்போமென்று"** அல்லாஹுத் தஆலா குர்ஆனில் கூறுகிறான்.(அவன் நாடினால் ஒரே பிடியாகப் பிடித்துக் கொள்வான். ஆகையால் அவனின் உபகாரங்களைப் பார்த்து மிரண்டு போகாதே!

56. ஒரு ஸாலிக் அல்லாஹுத் தஆலாவிடம் மரியாதைக் குறைவாக நடக்கும் போது, அதாபுகள்(தண்டனைகள்) வரப் பிந்தினால், அம்மனிதன் நான் நடக்கும் நடத்தை சரியான நடத்தைதான் என்றும் இல்லாவிட்டால் அல்லாஹுத் தஆலாவின் உபகாரங்கள் நின்று போயிருக்கும். (மேலும்)

அவனை விட்டும் என்னை தூரப்படுத்தியிருப்பான் என்று சொல்வது இவனின் அறிவின்மையாகும். ஏனென்றால் இவனுக்குத் தெரியாமலே உபகாரங்கள் அதிகப்படுவது தடைபட்டுப் போவது, உபகாரம் நின்று போவதற்கு, அம்மனிதனின் விஷயங்களுக்கு அல்லாஹுத் தஆலா பொறுப்பேற்றுக் கொள்ளாமல் அம் மனிதனிடமே அவ்விஷயங்களைச் சாட்டிவிடுவது, தன்னை விட்டு தூரப்படுத்துவதற்குப் போதுமானதாகும். இவ்விதமேற்படுவது அல்லாஹுத் தஆலாவிற்கும் அவனுக்குமிடையில் திரை ஏற்பட்டு அவன் சந்நிதானத்தில் நுழைய முடியாமல் தடுக்கப் படுவதின் ஆரம்ப கட்டமாகும்.

57. ஒரு மனிதனை அல்லாஹுத் தஆலா அனேக காலமாக வெளிப்படையான இபாதத்துகளிலும், அவ்றாதுகளிலும் நிலைத்திருக்கச் செய்து பலவிதமான உபகாரங்களும் செய்கிறான். அவ்விதமான மனிதனைப் பார்த்து இவரில் ஆரிபீன்களின்(அல்லாஹுத் தஆலாவை அறிந்தவர்களின்) அடையாளங்களையும்-அல்லாஹுத் தஆலாவிற்குச் சொந்தமான அடியார்களின் முகமலர்ச்சியையும் நீ காணா விட்டால், அல்லாஹுத் தஆலா அவருக்குக் கொடுத்திருக்கிற பாக்கியங்களை இலேசாக நினையாதே! அல்லாஹுத் தஆலாவின் "வெளியாகுதல்" அவருக்கில்லாவிட்டால் இபாதத்துகளும் இருந்திருக்காது.

58. சில ஜனங்களை அல்லாஹுத் தஆலா தன்னுடைய ஊழியத்திற்காக ஏற்படுத்தியிருப்பான். சில ஜனங்களை

அல்லாஹுத் தஆலா தன்னுடைய சிநேகிதர்களாக வைத்திருப்பான். எல்லோருக்கும் உன்னுடைய நாயனின் உபகாரம்தான்! உனது நாயனின் உபகாரமெனும் நன்கொடை தடுக்கப்பட்டவையல்ல! இதில் முந்திய கூட்டத்திற்கு ஆபிதீன்கள் என்று சொல்லப்படும். இவர்களின் வணக்கங்களில் மிகுதம் வெளி உறுப்புகளைச் சேர்ந்தவையாகும். இரண்டாம் கூட்டத்திற்கு **ஆரிபீன்கள்** என்று சொல்லப்படும். இவர்கள் வணக்கங்களில் மிகுதமும் கல்பைச் சார்ந்தவைகளாகும். எனினும் இவ்விரு கூட்டத்தவர்களும் அல்லாஹுத் தஆலாவின் நேசர்கள் தான்.

59. அல்லாஹுத் தஆலாவின் அறிவுகளான உதிப்புகள் கல்பில் உண்டாவது மிகுதமும் எதிர்பாராமல் திடீரென்று ஏற்படுகிறது. இவை இபாதத்துகளுக்குப் பின்னரேற்படுவது மிகக் குறைவாயிருக்கும். ஏனெனில் "நாங்கள் இபாதத்துச் செய்ததினால் அதற்குத் தகுதியாயிருந்தோம்" என்று தாவா செய்யாமலிருப்பதற்காக அவைகளில் மிகுதம் அல்லாஹுத் தஆலாவின் நன்கொடையாகத் தானிருக்கும். இபாதத்துகள் மிகுதியும் மறு உலக நன்மையை நாடித்தானிருக்கும். அல்லாஹுத் தஆலாவை நாடிய(தா)யிராது. அவ்விதமான ஆபிதுகள் அந்த உதிப்பிற்குத் தகுதியுள்ளவர்களல்லர். ஆகையால் உதிப்பு உண்டானால் அல்லாஹுத் தஆலாவின் நன்கொடையாகவும் திடீரென உண்டானதுமாயிருக்கும்.

60. கேள்விகள் அடங்கலுக்கும் பதில் கூறுகிறவனையும் மனக்கண்ணால் கண்டு கொண்டவைகளனைத்தையும்

பேசுகிறவரையும், அறிந்தவைகள் அனைத்தையும் அறிவிப்பவரையும் நீ கண்டால் அவருக்கு அறிவின்மை இன்னமுமிருக்கிறதென்பதற்கு ஆதாரம் வைத்துக்கொள்.

61. முஃமினானவர்களுக்குக் கூலி கொடுப்பதை மறு உலகிலாக்கியது ஏனென்றால், இவ்வுலகம் அவர்களின் இபாதத்திற்குக் கூலி கொடுக்கப் போதாததினாலும், அழிந்து போகக் கூடிய இவ்வுலகத்தில் கொடுக்கப்படும் கூலியைப் பார்க்கிலும் அவர்களின் இபாதத்து அதிக மதிப்புள்ளதாகவும் இருப்பதினாலேயாம்.

62. ஒருவர் தன் இபாதத்துகளின் இன்பங்களை இவ்வுலகில் அனுபவித்தால் மறு உலகில் அந்த இபாதத்துகள் ஒப்புக் கொள்ளப்பட்டவை என்பதற்கு அறிகுறியாயிருக்கும். ஆனால் இவ்வுலகிலேயே இன்பங்கள் அனுபவிப்பதை நாட வேண்டாம். எனெனில் அது இபாதத்துகளில் இக்லாஸைக் கெடுத்து விடும்.

63. அல்லாஹுத் தஆலாவிடத்தில் உனக்கு எவ்வளவு மதிப்பிருக்கிறது என்று நீ அறிய நினைத்தால், உன்னை அவன் எந்த விஷயத்தில் ஈடுபடுத்தியிருக்கிறானென்பதைக் கவனி!

ஒருவன் சீதேவிகளிற் பட்டவனாயிருந்தால் அவனை அல்லாஹுத் தஆலா அவன் தனக்குப் பொருத்தமான விஷயங்களில் ஈடுபடுத்துவான். மூதேவிகளிற் பட்டவனாயிருந்தால் அவன் தனக்குக் கோபமான விஷயங்களில் ஈடுபடச் செய்வான்.

64. வழிப்படுதலை அல்லாஹுத் தஆலா உனக்குத் தந்து அவனைக் கொண்டே நிலைபாட்டையும் தந்து, அவனல்லாதவைகளை விட்டு மனப் புறக்கணிப்பையும் (எப்பொழுது) தந்தானோ, அப்பொழுது உன் பேரில் வெளிரங்க–உள்ரங்கமான நிஃமத்துகளைச் சொரிந்து விட்டான் என்று தெரிந்து கொள்! அதாவது வெளிப்படையான வணக்கங்களையும் – அவனல்லாதவைகளை விட்டு நீ மறைந்து போகுதல் எனும் மஃரிபாவையும் உன் மீது பொழிந்து விட்டான்.

65. அல்லாஹுத் தஆலாவிடம் நீ கேட்கும் கேள்விகளில் மேலானது, உன்னிடத்தில் அவன் கேட்டுக் கொள்வதை நீ கேட்பதாகும். அதாவது; நீ அல்லாஹுத் தஆலாவிடம் உன்னுடைய ஈறுலக ஹாஜத்துக்களைக் கேட்பதைப் பார்க்கிலும், அவன் உன்னிடம் ஏவிய வேலைகளில் செம்மையாக இருப்பதைக் கேட்பது தான் மேலானது. (மேலும் கேட்பதை) நீ அடிமை என்ற விதத்தில் கேட்க வேண்டும்.

66. உனக்கு வழிப்பாடுகள் தவறிப் போனால் அதைச் செய்வதற்கு முயற்சிக்காமல் கவலைப்படுவது நீ மிரண்டு போயிருக்கிறாய் என்பதற்குரிய அடையாளமாகும். இது பொய்க் கவலையேயாகும். இதோடு பொய் அழுகையுமிருக்கலாம். உண்மையான கவலை இருந்தால் (தவற)விட்டதை நிறைவேற்றுவதற்கும் இனிமேல் தவறாமல் நடப்பதற்கும் முயற்சிப்பாய். அதோடு உண்மையான அழுகையும் அழுவாய்.

67. அல்லாஹுத் தஆலா அளவில் சமிக்ஞை செய்தால் அந்த சமிக்ஞையைப் பார்க்கிலும் அல்லாஹுத் தஆலா தன்னளவில் முடுகியவன் என்று தெரிந்து கொள்கிறவர் உண்மையில் (அல்லாஹுத் தஆலாவை அறிந்த) ஆரிபல்ல! உண்மையான ஆரிபாயிருந்தால் அவருக்கு சமிக்ஞை வேண்டாம். ஏனெனில் அல்லாஹுத் தஆலாவில் லயித்து அவனுடைய தரிசனத்தில் மூழ்கி இருப்பதால், சமிக்ஞை வேறு-சமிக்ஞை செய்பவன் வேறு, சமிக்ஞை செய்யப்படுகிறவன் வேறு என்று அவர் காண்பதில்லை. அவ்வாறு வெவ்வேறாக இருந்தாலல்லவா சமிக்ஞை செய்து தெரிந்து கொள்ள வேண்டும். இவ்விதமாக இருப்போர்களின் (மக்காம்) அந்தஸ்திற்கு "மகாமுல்-ஜம்உ" என்று சொல்லப்படும். அதாவது வேற்றுமை அற்ற நிலை எனக் கூறுவார்கள்.

68. பாவங்களை விட்டும் விலகி இபாதத்துகள் செய்வதில் முயற்சியாக இருந்து கொண்டு அல்லாஹுத் தஆலாவிடம் ஆசைப்படுவதற்கு ரஜா-ஆதரவு என்று சொல்லப்படும். அவ்வாறில்லாமல் பாவங்களில் ஈடுபட்டுக் கொண்டே அல்லாஹுத் தஆலாவின் கிருபைகளை ஆதரவு வைப்பதற்கு மேலெண்ணம் என்று சொல்லப்படும். அதாவது உம்னிய்யத்(மனக்கோட்டை, பொய் அவிழ்க்கை) என்றும் சொல்வார்கள். இது பிரயோஜனமற்றதாகும்.

69. அல்லாஹுத் தஆலாவிடத்தில் ஆரிபீன்களின் உண்மையான நோக்கமென்னவெனில் தான் அடிமைத்துவத்தில் உண்மையாளராயிருப்பதும் - அல்லாஹுத் தஆலா

எஜமானனாயிருப்பதற்கு நாம் பாவிக்க வேண்டிய பாத்தியதைகளை அடைவதுமாகும்.

அடிமைத்துவத்தில் உண்மையாயிருப்பதென்றால் அடிமையின் ஒழுக்கங்களையும் குணங்களையும் எடுத்துக் கொள்வதும், அல்லாஹுத் தஆலாவின் ஏவலுக்குத் தலை சாய்ப்பதும், அவன் கொடுத்தவைகளைப் பொருந்திக் கொள்வதும், அவனின் சோதனைகளைப் பொருந்திக் கொள்வது முதலியனவாகும்.

எஜமானனின் பாத்தியங்களைப் பாவிப்பதென்றால், வெளிப்படையில் வழிப்படுவதோடு உள்ரங்கத்தில் சாதாரணமாக அவனைத் தரிசிப்பதும் அவன் நினைவோடு இருப்பதுமாகும். இவ்வித நோக்கம் மற்றவர்களின் நோக்கங்கள் அனைத்தினும் மேலான நோக்கமாகும்.

70. அல்லாஹுத் தஆலா உனக்கு சிலவேளை மன சந்தோஷத்தையும்–முக மலர்ச்சியையும் தருவான். ஏனென்றால் சதா கவலையிலும் சஞ்சலத்திலுமிருந்து மனம் சுருங்கிப் போகாமலிருக்க சந்தோஷம் தருவான். சந்தோஷத்திலேயே இருந்து கெட்டுப் போகாமலிருக்க சில சமயம் மன வருத்தம் போன்றவைகளைத் தருவான்.

சிலவேளை அவனைக் கொண்டே பொழுது போக்காய் இருப்பதற்காக இவ்விரு நிலையையும் இல்லாதிருக்கச் செய்வான். அப்போது உன்னுடைய மனதில் சந்தோஷமோ–துக்கமோ இருக்காது. இவ்விரு குணங்களும் அல்லாஹுத் தஆலாவைத் தரிசிப்பதைத் தடுக்கிறது.

71. ஆரிபீன்கள் மனம் (கப்ளாய்) கிட்டுமையாயிருப்பதைப் பார்க்கிலும் சந்தோஷமாயிருப்பதைப் பயப்படுவார்கள். ஏனெனில் மனச் சந்தோஷமிருந்தால் அல்லாஹுத் தஆலாவுடன் அதபாகவும் ஒழுங்காகவுமிருக்க சில பேர்களால் தான் முடியும்; மிகுதமானவர் தவறி விடுவார்கள். சந்தோஷத்தில் தன் நப்ஸிற்கு சில அம்சங்கள் இருக்கின்றன.

மனம் கிட்டுமையாயிருந்தால் எப்போதும் அல்லாஹுத் தஆலாவின் பிடியிலிருப்பான். அல்லாஹு என்ற எண்ணத்துடனிருப்பான்; மற்ற கவனங்கள் வராது.

72. மனம் கிட்டுமையாயிருப்பதில் நப்ஸிற்கு எந்த விதமான அம்சங்களும் கிடையாது. சந்தோஷமாயிருப்பதில் நப்ஸிற்கு சில அம்சங்கள் இருக்கின்றன. இதில் தீங்கும், மனம் கிட்டுமையாயிருப்பதில், ஈடேற்றமும் எளிதாயிருக்கிறது.

73. சில வேளை உனக்கு அல்லாஹுத் தஆலா துன்யா இன்பங்களில் சிலதைத் தருவான். அப்போது அவனுக்கு வழிப்படுதல்-அவனளவில் முன்னோக்குதல் போன்றவைகளை உன்னை விட்டும் தடுத்துக் கொள்வான்.

சில வேளை வழிப்பாட்டையும் - அவனளவில் முன்னோக்குதலையும் தருவான். துன்யாவின் இன்ப சுகங்களைத் தடுத்துக் கொள்வான். ஆனால் உனக்கு விளக்கம் எனும் வாயல் திறக்கப்பட்டால் அவன் தடுத்துக் கொண்டது உண்மையான கொடையாகவும் அவன் கொடுத்தது உண்மையான தடையாகவும்(இருக்குமென்பதைத்) தெரிந்து கொள்வாய்!

74. உலகம் எனும் சிருஷ்டிப் பொருள்களின் வெளிப்படைத் தோற்றம் அதனுடைய அழகும் பளபளப்பும் மனிதர்கள் பார்த்து மிரண்டு போகும் அளவிற்கிருக்கிறது. அதன் அந்தரங்கத்தைக் கவனிப்பவர்களுக்கு அது அற்பத்தனமானதினாலும் அழிந்து போகக் கூடியதினாலும் உபதேசத்தைக் கொடுக்கக் கூடியதாயுமிருக்கிறது. ஆகவே நப்ஸு அதனுடைய மிரட்டுதல் எனும் வெளிப்படையைப் பார்க்கிறது. கல்பாகிறது அதனுடைய உபதேசம் எனும் அந்தரங்கத்தைப் பார்த்து கவனித்து அதன் தீங்குகளை விட்டும் தப்பித்துக் கொள்கிறது.

75. உனக்கு அழிந்து போகாத சங்கையும்-கீர்த்தியும் பெயரும் வேண்டுமென நினைத்தால், அழிந்து போகக்கூடியவர்களிடத்தில் சங்கையைத் தேடாதே! (ஏனெனில்) அவர்கள் அழிவதோடு உனது சங்கையும் போய்விடும். ஒரு போதும் அழியாத அல்லாஹுத் தஆலாவிடம் உன்னுடைய எல்லாப் பழக்க வழக்கங்களையும்-சம்பந்தங்களையும் வைத்துக் கொள்! அவனிடமே சங்கைக்குரிய விதமாய் நடந்து கொள்! அழியாத சங்கையை நீ பெற்றுக் கொள்வாய்!

76. ஒ ஸாலிக்கே! பூமி சுருட்டப்பட்டு ஒரே எட்டில் நீ நினைத்த இடம் போய்ச் சேருவதோ, அல்லது இரவையும்-பகலையும் சுருட்டப்பட்டு நோன்பும் தொழுகையுமாக நீ காலத்தைக் கழிப்பதோ உண்மையான சுருக்கமல்ல. உண்மையான சுருக்கம் என்பது, உன்னை விட்டும் துன்யாவின் தொலை தூரங்கள் சுருட்டப்பட்டு, மறு உலகமாகிறது

உன்னளவில் உன்னைப் பார்க்கிலும் முடுகி இருக்கிறதென்று நீ காண்பதாயிருக்கும். அதாவது: கல்பில் நூருல் எகீன் எனும் பிரகாசம் உதயமாகும் போது, அவனுடைய பார்வையில் துன்யா அழிந்து போவதாக(க் காண)வும், மறு உலகமாகிறது தன் எதிரிலுள்ளதாகவும் பார்ப்பதாகும். உலக ஆசாபாசங்கள் நிரம்பி இருக்கும் கல்பில் இந்தப் பார்வை ஏற்படாது.

77. ஜனங்கள் உனக்கு ஏதேனும் நன்கொடை தரும்போது, உன்னுடைய எஜமானனாகிய அல்லாஹுத் தஆலா தருகிறான் என்பதை மறந்து விட்டு, மனிதன் தான் தருகிறானென எண்ணிக் கொண்டு அதைப் பெற்றுக் கொள்வது வெளிப்படையில் அது நன்கொடையாயிருந்தாலும் உண்மையில் அது நத்துதல் கேடாயிருக்கும். அல்லாஹுத் தஆலா உனக்கு நன்கொடை தராமலிருப்பதுவே உண்மையில் நன்கொடைதான். ஏனெனில் தராமலிருக்கையில் உன் மனம் அவனை விட்டு மறவாமல் அவனிலேயே கொழுகியிருந்தது. ஆகையால் வெளிப்படையில் அவன் நன்கொடை தராமலிருப்பதும் உண்மையில் நன்கொடைதான்.

78. மனிதர்கள் இவ்வுலகில் பலவிதமான வணக்கங்கள் செய்ய, அதற்குக் கூலி மறு உலகத்தில் கொடுப்பேனென்று கடன் சொல்வதைவிட்டு அல்லாஹுத் தஆலா பரிசுத்தனாயிருக்கிறான். அவ்வாறு கடன் சொல்லுவது சங்கை பொருந்திய அல்லாஹுத் தஆலாவின் இயல்பில் இல்லை. ஆகவே அமல்களுக்குக் கூலி கொடுப்பது மறு உலகத்தில் மட்டுமல்ல; இவ்வுலகிலேயே அல்லாஹுத் தஆலா சில

பேர்களுக்கு கூலிகளில் சிலவற்றை (கொடுத்து) வெளியாக்குவான். அக்கூலிகளும் போதுமானதொரு கூலிதான். "உன்னை அல்லாஹுத் தஆலா இபாதத்து என்ற வேலைக்குத் தகுதியுள்ளவன்" என்று பொருந்திக் கொண்டதும், இபாதத்துகள் செய்யும் போது "அவர்களின் கல்புகளில் அல்லாஹுத் தஆலா உதயமாக்கிக் கொடுக்கக் கூடிய இன்பங்களும்-ருசிகளும்-அவனோடு மனம் கொழுகுதல் போன்றவைகளும்," இபாதத்துச் செய்து முடிந்த பின் "அவர்களின் கல்புகளில் அவன் ஏற்படுத்தும் சந்தோஷங்களும்" இவ்வுலகக் கூலிகளில் பெரும் கூலிகளாகவும் அவனது நிஃமத்களாகவுமிருக்கின்றன. அவனுடைய உதவி இல்லாவிட்டால் அவனுக்கு ஊழியம் செய்யவோ-அவன் முன்னிலையில் நிற்கவோ எவராலும் முடியாது. ஆகவே இக் கூலியே(இவ்வுலகத்திற்குப்) போதுமானதாகும்.

79. அல்லாஹுத் தஆலாவில் நின்றும் எதாகிலும் ஒன்று கிடைப்பதற்காகவோ அல்லது உனக்கு வரும் ஏதேனுமொரு கஷ்டத்தை நீக்குவதற்காகவோ அல்லாஹுத் தஆலாவை நீ வணங்கினால் அது உண்மையில் அவனை வணங்கியதாகாது.

அதாவது சுவர்க்கத்தையோ, அதிலுள்ள சுகங்களையோ நாடி வணங்கினாலும் அல்லது கப்ரின் கஷ்டத்தையோ, நரகத்தையோ அதிலுள்ள பலவித சங்கடங்களையோ வரவிடாமல் தடுத்துக் கொள்ளவோ(நினைத்து) வணங்குவது, தன் நப்ஸின் இச்சைக்காகவும், ஒரு பிரயோஜனத்தை

அடைவதற்காகவும் வணங்கியதாகவே ஆகும். அல்லாஹுத் தஆலாவை (வணங்கியதாய்) ஆகாது.

அல்லாஹுத் தஆலாவின் வலுப்பத்தையும்-கண்ணியத்தையும் நாடி அவன் ஏவலுக்குத் தலை சாய்த்து வணங்கும் வணக்கம் தான் அவனுக்காக வணங்கியதாய் ஆகும். இவ்வெண்ணத்தில் வணங்குபவன் கூலியை எதிர்பார்க்க மாட்டான். (இதற்கு) கூலி கிடைத்தாலும்-கிடைக்காவிட்டாலும் அவனுக்கு ஒன்று தான்; கூலி கிடைக்காவிட்டால் மனம் சோர்ந்து போகும். வேலை கூலிக்காகவே(உழைத்ததாக) ஆகும்; அல்லாஹுத் தஆலாவிற்காய் இல்லை.

80. அல்லாஹுத் தஆலா எப்பொழுது உனக்கு யாதொன்றைக் கொடுத்தானோ(அப்பொழுது) அவனது நன்மையைக் கொண்டு உன்னைப் பார்த்து விட்டான். அதாவது: அவனுடைய கிருபை, ஈகை, இரக்கம், கொடை எனும் குணங்களைக் கொண்டு உன்னைப் பார்த்தான். எப்பொழுது கொடை கொடுக்காமலிருந்தானோ அப்பொழுது அவனுடைய அடக்கியாளுதல், பெருமை, தேவையற்ற நிலை எனும் குணங்களைக் கொண்டு உன்னை நோக்கி விட்டான். ஆகவே இவ்விரு வேளைகளிலும் நீ அவனை அறிவதற்கு விரும்பினான்; அவனுடைய மெல்லினம் (இரக்கம்) உள்ளவன் என்ற நாமத்தைக் கொண்டு உன்னை முன்னோக்கி விட்டான். அவனைத் தெரிந்து கொள்வதற்கு அவன் நாட்டத்தையன்றி வேறு வழியில்லை. ஆகவே தந்தோ-தராமலோ உன்னை

அறிய வைத்ததற்கு அவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறாய்.

81. அல்லாஹுத் தஆலா உனக்கு நன்கொடை தராமலிருப்பது உனக்கு வருத்தத்தைத் தருவது அவனைப் பற்றி இந்த விஷயத்தில் நீ தெரிந்து கொள்ளாததினாலேயாகும். தெரிந்திருந்தால் சந்தோஷப் படுவாய். ஏனென்றால் அவனுடைய வாசலில் நீ நிற்பதற்கும்–எப்போதும் அவனைக் கொண்டு கொழுகி நிற்பதற்கும் இது ஒரு காரணமாய் இருக்கிறது. இது அவனுடைய சிநேகிதர்களுக்குக் கொடுக்கும் ஒரு வாய்ப்பாயிருக்கும்.

82. சில வேளை உனக்கு அல்லாஹுத் தஆலாவின் வழிப்பாடு எனும் வாசல் திறக்கப்படும். ஆனால் ஒப்புக் கொள்ளுதல் எனும் வாசல் திறக்கப் படாமலிருக்கலாம்.

சில வேளை பாவங்களைக் கொண்டு உன் பேரில் கற்பிக்கப்பட்டிருக்கும். அதன் காரணமாய் நீ அல்லாஹுத் தஆலாவோடு சேருவதற்கு சந்தர்ப்பம் வாய்க்கக் கூடும். அதாவது:– வழிப்பாடுகளைக் கெடுக்கக் கூடிய தற்பெருமை முகஸ்துதி போன்றவைகள் ஏற்பட்டு அவை ஒப்புக் கொள்வதற்கு அருகதை இல்லாமற் போய்விடக் கூடும். சில வேளை பாவங்களேற்பட்டால் தவறி விட்டோமே என்று நினைத்து அழுது தௌபா செய்து மன்றாடி கவலைப் பட்டு அவனிடமே நீ ஒதுங்கி நிற்பாய். இது மூலமாக தன்னளவில் உன்னை அவன் சேர்த்துக் கொள்வான். ஆகையால் இபாதத்தின் வெளிப்படையைப் பார்த்து ஒரு முடிவு செய்யக்

கூடாது. வழிப்பட்டவன் பயப்படவும், பாவம் செய்தவன் ஆதரவாயிருப்பதற்கும் சந்தர்ப்ப மேற்படலாம்.

83. அல்லாஹுத் தஆலாவிற்கு அடிபணிதலையும் தலைசாய்க்குதலையும் வருத்தும் பாவமானது, பெருமையையும் கர்வத்தையும் வருத்தும் வழிப்பாட்டைப் பார்க்கிலும் மேலானதாயிருக்கும். ஏனென்றால் அடிபணிதல், தலை சாய்க்குதல் போன்றவைகள் அடிமைகளின் குணம். இவை மூலம் எஜமானனாகிய அல்லாஹுத் தஆலாவிடம் சேருவதற்கு இடம் வாய்க்கிறது.

பெருமை–சங்கை போன்றவைகள் அல்லாஹுத் தஆலாவின் குணங்களாகும். இக் குணங்களை மனிதன்(கைக்) கொள்வதனால் அவனின் சந்நிதானத்தை விட்டுத் தூரமாவதற்கு இடமாகிறது. ஆகவே இந்த நன்மையைப் பார்க்கிலும் அத் தீமை மேலாயிற்று. (இதனைத் தான்) தீமையை நன்மையாய் மாற்றுவான் என்று அல்லாஹுத் தஆலா குர்ஆன் ஷரீபில் பிரஸ்தாபிக்கிறான்.

84. அல்லாஹுத் தஆலாவின் இரண்டு நிஃமத்துகளை விட்டு எந்த சிருஷ்டிகளும் ஒழிந்ததாய் இருப்பதில்லை. ஒன்று; இல்லாமையிலிருந்து வெளியாக்குதல் (சிருஷ்டித்தல்). மற்றொன்று; உண்டானபின் நிலை பெறச் செய்தல். இவ்விரண்டு நிஃமத்துகளும் இல்லாவிட்டால் எந்த வஸ்துவும் உண்டாகவோ நிலைக்கவோ முடியாது. ஆகவே முந்திய நிஃமத்தாகிய சிருஷ்டித்தல் என்ற நிஃமத்தை கொண்டு உன்னைப் படைத்து, நிலை பெறச் செய்தல் என்ற நிஃமத்தைக்

கொண்டு உன்னை நிலைக்கச் செய்தான். அதாவது உன்னுடைய ஆரம்பமும் நிலைபாடும் அல்லாஹுத் தஆலாவில் நின்றுமாயிருக்கும்.

85. ஏழ்மை உனக்கு இயற்கையாகும். பசி–பிணி போன்றவைகள் உன்னில் மறைந்து கிடக்கும் அவ்வேழ்மைத்தனத்தை ஞாபகமூட்டும். இடையிலேற்படும் சீமான்தனம்–சுகங்கள் போன்றவை உன் இயற்கை ஏழ்மையை நீக்கி விடாது.

அதாவது நீ அல்லாஹுத் தஆலா அளவில் தேவையானவன். எனினும் கொஞ்சம் சுகமாக இருந்ததால் அத் தேவையை மறந்து விட்டாய்; கஷ்ட–நஷ்டம் வரின் உனது ஏழ்மையை நினைப்பாய்.

86. உன் நேரங்களில் உன் ஏழ்மையை நினைக்கச் செய்து தலைசாய்க்குதலை உண்டாக்கும் நேரமே சிறந்தது. ஏனென்றால் இத்தகைய நேரங்களில் உனது மனம் அல்லாஹுத் தஆலாவுடன் ஆஜராக இருக்கும். அவ்வமயம் மற்ற வஸ்துக்களின் கவனமோ ஆசையோ உண்டாவதில்லை.

87. எப்பொழுது அல்லாஹுத் தஆலா உனக்கு சிருஷ்டிகளிடம் வெறுப்பை உண்டு பண்ணினானோ அப்பொழுது அவனது பிரியம் எனும் வாயலை உனக்குத் திறந்து விட்டான் என்று தெரிந்து கொள். ஆகவே சிருஷ்டிகளின் மதிப்பு உன் மனதில் ஏற்படாது; எப்பொழுதும் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டே பொழுது போக்காய் இருப்பாய். மேலும் உனக்கு எப்பொழுது அல்லாஹுத் தஆலாவிடம் "துஆ" கேட்குதல்

எனும் நாவை அவிழ்க்கப் பட்டதோ அப்பொழுது அவன் உனக்கு உன் நாட்டத்தை நிறைவேற்றித் தர நாடிவிட்டான் எனத் தெரிந்து கொள்.

"என்னிடம் கேளுங்கள். நான் ஜவாபு சொல்கிறேன்" என அல்லாஹுத் தஆலா அருள்கிறான்.

88. ஆரிபீன்கள் அல்லாஹுத் தஆலாவை தரிசிப்பதில் ஆசித்துத் துடித்துக் கொண்டே இருப்பார்கள். இன்னும் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா அல்லாத வஸ்துக்களைக் கொண்டு மன நிம்மதியோ அவை பக்கம் மனச்சாய்வோ எற்படாது. சிருஷ்டிகளை வெறுப்பதும்–துஆ கேட்டுக் கொண்டே இருப்பதும் ஆரிபீன்களின் இரு குணங்களாகும்.

89. வெளிப்படை எனும் "உலகங்களை" அல்லாஹுத் தஆலாவின் இலட்சணங்கள் எனும் சூரியன்–சந்திரன்–நட்சத்திரங்களைக் கொண்டு பிரகாசிக்கச் செய்தான். ஆரிபீன்களின் கல்பின் அந்தரங்கங்களை அல்லாஹுத் தஆலாவின் வெளியாகுதல் எனும் அறிவுகளைக் கொண்டு பிரகாசிக்கச் செய்தான். அதாவது உலகை அவனது சிருஷ்டிகளைக் கொண்டு பிரகாசிக்கச் செய்தான். மனதின் அந்தரங்கத்தை அவனது பூர்வீகமான அறிவுகளைக் கொண்டு பிரகாசிக்கச் செய்தான். ஆகையால் உலகின் பிரகாசம் மறைந்து விடும். மனதின் பிரகாசம் மறையாது. அதாவது பகலின் சூரியன் இரவில் மறைந்து விடும். மனதின் சூரியன் மறைவதில்லை என்று சொல்லப் பட்டிருக்கிறது.

90. உனக்கேற்படும் சீக்கு பிணிகளும்-பலாய் முஸீபத்துகளும் இலேசாவதற்காக அதை எற்படுத்தியவன் அல்லாஹுத் தஆலா தான் என்று உனக்கு அவன் அறிவித்தான். அதாவது உனக்கேற்படும் கஷ்ட நஷ்டங்களனைத்தும் தருவது அல்லாஹுத் தஆலா தான். அவன் உன் உள்ளத்தை அறிபவன். அவைகளை வெளியில் தெரியாத பல நன்மைகளுக்காக ஏற்படுத்தியிருப்பான். மற்றவர்களால் உனக்கொரு நன்மையும் தீமையும் விளைவிக்க முடியாது.

இவ்வித துன்பங்கள் துயரங்களைக் கொண்டு உன்னை நோக்கியவன் தான் உனக்கு நல்லெண்ணங்களையும் ஆக்கியவன். ஆகவே அல்லாஹுத் தஆலா அடியார்கள் பேரில் ஈகை இரக்கம் உள்ளவன் என்று தெரிந்து கொண்டவர்கள் இவ்விதமான கஷ்டங்களில் மறைவான பல நன்மைகளிருக்குமென்றெண்ணி சந்தோஷிப்பார்கள். நீங்கள் வெறுக்கும் விஷயங்களில் உங்களுக்கு நன்மை இருக்கக் கூடும் என அல்லாஹுத் தஆலா அருளுகிறான்.

91. அல்லாஹுத் தஆலா ஏற்படுத்தும் கஷ்டங்களில் அவனுக்கு இரக்கமில்லை என்று நினைப்பவனுக்கு அறிவில் குறை இருக்கிறது. ஏனென்றால் அல்லாஹுத் தஆலாவைப் பற்றி நன்கு தெரிந்தவன் இக் கஷ்டங்களில் அநேக நன்மைகளைத் தெரிந்து கொள்வான். அதாவது:- கஷ்டங்களில் அல்லாஹுத் தஆலா அளவில் முன்னோக்குவான். (இன்னும் இத்தகைய துன்பங்களால்)

உடல் இளைத்து அசக்தனாகிய மனிதனுக்கு தீய குணமும், உலகாசையுமற்று விடுகிறது. மேலும் பொறுமை-பரஞ்சாட்டுதல் பொருந்திக் கொள்ளுதல்-மனிதர்களை விட்டு தனித்திருத்தல், உலகை வெறுத்தல் போன்ற கல்பின் வணக்கங்கள் அதிகமாகிறது. இதனால் தான் "**மனத்தின் அணுவத்துணை வணக்கம் வெளி உறுப்பின் மலையளவு வணக்கத்தை விட மேலானது**" என்று சொல்லப்படுகிறது. ஆகவே அல்லாஹுத் தஆலா செய்வது அனைத்தும் நன்மையேயாகும். அவனைத் தவிர செய்பவன் வேறெவரும் இல்லை.

92. அல்லாஹுத் தஆலாவினளவில் உன்னைச் சேர்க்கும் அடிமைத்துவத்தின் வழிகள் பிசகிப் போய் விடும் என்பதைப் பற்றி உன்பேரில் பயப்படவில்லை. அவைகள் குர்ஆன் ஹதீஸ்கள் மூலம் தெளிவாக இருக்கின்றன. உன்பேரில் பயப்படப்படுவது இபாதத்துகளில் நீ அகப் பெருமையினாலும்-நிஃமத்துகளுக்கு ஷுக்ரு செய்யாமலும்-உன் ஆசை மிகைப்பாலும் கெட்டுப் போய்விடுவாய் என்பதற்காகவே. ஆகையால் தகுதியானதொரு **ஷெய்கின்** (வழிகாட்டியின்) கீழ் நீ இருந்து வருவது அவசியமாகும்.

93. மனித இலட்சியங்களாகிய துன்யா வேலைகளில் ஈடுபடச் செய்வதை விட்டு தனக்குச் சொந்தமாகிய அவ்லியாக்களை மறைத்துக் கொண்டவனைப் பரிசுத்தப்படுத்துகிறேன்.

அதாவது சில அவ்லியாக்கள் தம்மை சாதாரண ஜனங்களுக்குக் காட்டாமலிருக்க வெளியில் சில துன்யா

வேலைகளைச் செய்து கொள்வார்கள். ஆனால் அந்த வேலையில் அவர்கள் மனம் பற்றி நிற்காது. பார்ப்பவர்கள் அவரைச் சாதாரண மனிதராகத்தான் நினைப்பர்.

அடிமைத்துவமெனும் குணங்களை வெளியாக்குவதில் வலுப்பம் தங்கிய எஜமானத்துவத்தைக் கொண்டு வெளியான அல்லாஹுத் தஆலாவையும் நான் பரிசுத்தப் படுத்துகிறேன்.

அதாவது அடியார்களுக்கு சீக்கு பிணி ஏற்படும்போது அதன் பரிகாரங்களுக்காக அல்லாஹுத் தஆலா அளவில் ஒதுங்குவார்கள். அப்பொழுது அவர்களுக்கு இப்பிணியைப் போக்கும் தகுதியுள்ள நாயனொருவன் உண்டுமென்று தெரிகிறது. இப்பிணிகள் ஏற்படாவிட்டால் அவ்வறிவு வந்திருக்காது; நாயனை அறியவுமாட்டார்கள். ஆகவே நாயன் அடியார்களுக்கு வெளியில் தெரியவந்தது, இத்தகைய கஷ்டங்களென்ற அடிமைத்துவத்தின் மறைவில் தான்(என) ஆகிவிட்டது. இவ்விதம் வெளியாகும் நாயன் குறைகள் யாவையும் விட்டும் துாயவன் என்று நான் சொல்கிறேன்.

94. உன் நாட்டங்கள் நிறைவேறுவது பிந்துவதால் உன் நாயன் மீது கெட்ட எண்ணம் கொள்ளாதே! நிறைவேற்ற(வும்) கேளாதே! உன்னுடைய நப்ஸிடத்தில் அதபு(பண்பு) குறைவாயிருப்பதைப் பற்றி கேள்! அதாவது, அல்லாஹுத் தஆலா இடத்தில் நீ அதபாக இருந்திருந்தால் நாட்டம் நிறைவேறி இருக்கும். ஆனால் நாட்டம் நிறைவேறக் கேட்பதே ஒரு மரியாதைக் குறைவாகும். ஏனெனில் நாட்டம் நிறைவேறக் கேட்கிறாயே அன்றி அல்லாஹுத் தஆலாவைக் கேட்கவோ

நாடவோ இல்லை. இவ்வித அதபுகளை நப்ஸிடம் கேள்! அதுமட்டுமல்ல! நாட்டம் நிறைவேறவில்லை என்று நினைப்பதும் தீய எண்ணமாகும். ஏனெனில் இடத்திற்கும் காலத்திற்கும் ஆளுக்கும் தக்கவாறு அது நிறைவேறி இருக்கும் அது உனக்குத் தெரிந்திராது. அது தெரிந்திருப்பது நிறைவேறுவதற்கு ஷர்த்துமல்ல! ஆகவே நாட்டம் நிறைவேறவில்லை என்று நினைப்பதுவும் அதபுக் குறைவாகும். அதபா இருப்பதைக் (ஸிராதுல் முஸ்தகீமை) கேள்.

95. எப்பொழுது உனக்கு அல்லாஹுத் தஆலா தன் ஏவல்களுக்கு வெளியில் வழிப்படுதலையும், மறைமுகத்தில் அவனது அடக்கி ஆளுதல் என்ற குணம் வெளியாகும் கஷ்ட நஷ்டங்களுக்கு தலை சாய்த்து பொருந்தும் தன்மையை தந்தானோ அப்பொழுது அவனுடைய பெரும் நிஃமத்துகளை உனக்கு அளித்து விட்டான்.

அதாவது, வெளிப்படையான அடிமைத்துவத்தையும் உள்ரங்கமான அடிமைத்துவத்தையும் தந்து விட்டான். நீ உண்மையான அடிமையாயிருந்தால் இவ்விரண்டும் கிடைத்த பிறகு எதனைக் கேட்கின்றாய்? இவ்விரண்டும் தான் உன்னிடம் கேட்கப்பட்டது.

96. தண்ணீரில் நடக்குதல்-காற்றில் பறக்குதல் போன்ற கராமத்துகளைக் கொண்டு சொந்தமாக்கப்பட்டவர்கள் யாவரும் நப்ஸின் அபாயங்களை விட்டும் இரட்சணை பெற்றவர்களாயிருக்க மாட்டார்கள். அவர்களிலும் துன்யாவின் ஆசாபாசங்களும் இச்சைகளும் இருக்கும். ஆகவே

உண்மையான "கராமத்" என்பது செம்மையாக இருப்பதாயிருக்கும்.

97. மனிதர்கள் சாதாரணமாகச் செய்து வரும் இபாதத்துகளை அறிவீனர்களன்றி (மற்றவர்) கேவலமானதாகப் பாவிக்க மாட்டார்கள்.

அல்லாஹுத் தஆலாவின் புறத்தால் ஏற்படும் மஃரிபா– மனப்பிரகாசம் போன்றவைகளை இவ்வுலகிலும் மறு உலகிலும் பெற்றுக் கொள்ளலாம். இபாதத்துகள் இவ்வுலகம் முடிவடைவதோடு முடிந்து விடும். ஆகையால் இபாதத்துகளை மற்றவைகளைப் பார்க்கினும் தீவிரமாய்ச் செய்து கொள்வது அவசியமாகும். அது மட்டுமல்ல!

இபாதத்து என்பது உன்னில் நின்றும் அவன் தேடக்கூடியது. மனசுத்தி என்ற மஃரிபாக்கள் அவனிடம் நீ கேட்கக் கூடியது.

அவன் உன்னிடம் கேட்பதற்கும் நீ அவனிடம் கேட்பதற்கும் எவ்வளவு வித்தியாசங்கள் இருக்கின்றன? ஆகையால் இபாதத்துகளை விட்டு விட்டு மஃரிபாவை எதிர்பாராதே! ஆரிபீன்கள் மஃரிபா உண்டாகிய பின்பும் இபாதத்துகளை விடுவதில்லை.

98. அல்லாஹுத் தஆலாவின் புறத்திலிருந்து அடியார்களுக்கு ஏற்படும் உபகாரங்கள் தகுதிக்குத் தகுந்தபடியாயிருக்கும். இதனால் தான் "வேற்றுமைகளிலிருந்து மனதைச் சுத்தப்படுத்து; மஃரிபாக்கள் அல்லாஹுத் தஆலாவின் இரகசியங்களால் (அது) நிரம்பும் என்று சொல்லப்படுகிறது."

கல்பின் பிரகாசங்களை ஜொலிக்கச் செய்வது அதன் அந்தரங்க சுத்தத்திற்குத் தக்கபடியிருக்கும். ஆகையால் உலகத்தோடும்–வேற்றுமையைக் காட்டும் வஸ்துக்களோடும் மனதைக் கொழுக விடாமல் சுத்தப்படுத்திக் கொள்ளவும்.

99. பஜ்ரு ஆனதும் அல்லாஹுத் தஆலாவை மறந்தவர்கள் இன்று என்ன செய்வோம் என எண்ணுவார்கள். புத்திவான்கள் இன்று நம்மை அல்லாஹுத் தஆலா என்ன செய்யப் போகிறான் என பார்ப்போம் என்று நினைப்பார்கள்.

அதாவது, புத்திவான்கள் செய்கையடங்கலையும் அல்லாஹுத் தஆலாவிடம் ஒப்படைத்து விடுவார்கள். அவர்களின் செய்கைகளை அவனே ஏற்றுக் கொண்டு எல்லாவற்றையும், இலேசாக முடித்து விடுவான்.

மற்றவர்கள் தம் சக்தியால் செய்ய எத்தனிப்பார்கள். (அதனால்) எவ்வளவு கஷ்டம் எடுத்துக் கொண்ட போதிலும் காரியம் சித்தியாகாது. ஆகவே காலையில் செய்யப் போகும் வேலைகளில் அல்லாஹுவைச் சம்பந்தப்படுத்தினால் அவ்வேலை வெற்றிகரமாக முடியும். அவன் அல்லாஹுத் தஆலாவினளவில் சேர்ந்தவனாகி விடுவான். தன் சக்தியில் சம்பந்தப்படுத்தினால் காரியம் பலிக்காது. எனவே அல்லாஹுத் தஆலாவை விட்டு அகன்றவனாகி விடுகிறான்.

100. இபாதத்துகளின் பொருட்டால் அல்லாஹுத் தஆலாவை முன்னோக்கும் ஆபிதுகளும்–தவக்குலின் பொருட்டால் அவனை முன்னோக்கும் ஜாஹித்(துறவி)களும் வஸ்துக்களை வெறுப்பதும் அதைவிட்டு விரண்டோடுவதும்,

அவ்வஸ்துக்களில் அல்லாஹுத் தஆலாவை விட்டும் மறைக்கப்பட்டிருப்பதினாலேயாகும். ஆரிபீன்களைப் போன்று வஸ்துக்களில் அல்லாஹுத் தஆலாவை தரிசித்திருந்தால் எவ்வஸ்துக்களை விட்டும் (அவர்கள்) மிரளமாட்டார்கள். இவர்கள் தங்களின் நப்ஸின் அம்சங்களை விட்டும் புறக்கணிக்காததால் இவ்வஸ்துக்கள் தங்களின் நோக்கங்களைத் தடுக்கின்றனவென்று நினைத்து ஓடுகின்றனர். அதில் அல்லாஹுத் தஆலாவை தரிசித்தால் விரளவேண்டிய அவசியமில்லை. எதைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென விரளுகிறார்களோ அது இவ்வஸ்துக்களில் இருக்கிறது.

101. ஸாலிக்குகளே! இவ்வுலகில் அல்லாஹுத் தஆலா தன் சிருஷ்டிகளைப் பார்க்கச் சொல்லி அவன் ஏவுகிறான். அப்படிப் பார்த்தால் உனது நுண்ணறிவில் அவன் வெளியாகி இருப்பதாகக் கண்டு கொள்வாய். மறு உலகில் அவன் "தாத்தின்" சம்பூரணத்தை உன் கண்பார்வையில் வெளியாக்கப் படும். ஆகவே இவ்வுலகில் அகக் கண்ணின் பிரகாசத்திற்குத் தக்கவாறும் மறு உலகில் ஆண்டவன் வெளியாகுவதற்குத் தக்கவாறும் அவனைக் காண்பது சாலும்.

102. நீ அல்லாஹுத் தஆலாவை விட்டுறுருக்க நீ பொறுமை கொள்ள மாட்டாய் என அவன் அறிந்ததினால் அவன் தன்னில் நின்றும் வெளியாகும் சிருஷ்டிகளில் உனது அகக் கண்ணால் உனக்கு தன்னைக் காண்பித்தான். இவ்வுலகில் வெளிக் கண்ணால் பார்க்க முடியாமல் மறைத்ததும்

அகக் கண்ணால் சிருஷ்டிகளில் காண்பித்ததும் அவனில் நின்றுமுள்ள பெரும் நிஃமத்தேயாகும்.

103. இபாதத்துகளில் உனக்கு சடைவுகள் ஏற்படுமென்று அல்லாஹுத் தஆலா அறிந்ததினால் இபாதத்துகளை பல வகையாய் ஆக்கினான். அது உன் மீதுள்ள இரக்கமும் உனக்கு இலேசுமாகும். ஒரே வகையாயிருந்தால் சடைவு ஏற்பட்டு அதை விட வேண்டியதாய் ஆகி விடும். (ஏனெனில்) நப்ஸு எப்போதும் ஒரே விதமாயிருப்பதை விரும்பாது.

உனக்கு அவசரப்படுதல் உண்டென்பதை அல்லாஹ் அறிந்ததால் சில வேளைகளில் அந்த இபாதத்துகளை உனக்குத் தடுத்தான். அவசரத்துடன் இபாதத்துகள் செய்தால் இபாதத்துகளின் வெளி உருவம் ஏற்படுமேயன்றி அதன் உயிராகிய உள்ளச்சம் ஏற்படாது.

தொழுகையை நிலைபெறச் செய்யும் எண்ணம் உண்டாவதற்காக சில நேரங்களில் தொழுவதைத் தடுத்தான். பொதுவாய் தொழுகையின் தோற்றம் உண்டாவதற்காகயில்லை. ஏனெனில் தொழுகிறவன் எல்லாம் தொழுகையை நிலை பெறச் செய்பவனில்லை.

அதாவது அவசரத்துடனும் ஆத்திரத்துடனும் தொழுதால் தொழுகையின் உருவம் தான் ஏற்படும். அவ்விதம் தொழ நமக்கு ஏவலில்லை. "தொழுகையை நிலை படச் செய்யுங்கள்" என்று தான் ஏவப்பட்டோம். அது அவசரப்படாமல் தொழுவதில் தான் சாத்தியமாகும். ஆகவே சில நேரங்களில் தொழுவதைத் தடுக்கப்பட்டது.

104. தொழுகை "பாவம்" எனும் அழுக்குகளையும் வேற்றுமையினால் ஏற்படும் மனக் களங்கங்களையும் அல்லாஹுத் தஆலாவின் தரிசினையை தூரப்படுத்தும் வஸ்துக்களையும் விட்டு மனதைப் பரிசுத்தப் படுத்துகிறது. மேலும் உன்னை விட்டு மறைந்திருக்கும் அஸ்ரார்களையும் மஃரிபாக்களின் வாயல்களையும் திறக்கத் தேடுகிறது. ஏனெனில் வேற்றுமைகளை விட்டு மனம் சுத்தமாகும் தருணம் கல்பின் திரைகள் நீங்கி விடுகின்றன. அவ்வமயம் மறை பொருட்களை நீ பார்த்துக் கொள்வாய்! மேலும் அத் தொழுகை அல்லாஹுத் தஆலாவுடன் கூடிப் பேசும் ஸ்தானமுமாகும். மேலும் அத்தொழுகை உனக்கும் அல்லாஹுத் தஆலாவிற்கு மிடையில் உள்ள வேற்றுமைகளை நீக்கி மனதையும் அதன் அந்தரங்கத்தையும் சுத்தப்படுத்தி உனது உள்ளமையை அவனின் உள்ளமையில் அழித்து ஏக ஒன்றாக்கி சுத்தமாக்கும் தானமுமாகும்.

ஆகவே அந்தத் தொழுகையில் கல்பு என்ற மைதானம் விரிந்து அநேக இரகசியங்கள் வெளியாகவும்-பிரகாசமென்ற ஜோதிகள் ஜொலிக்கவும் விஸ்தீரணமாகி விடுகிறது. இவ்வித தொழுகையைத் தான் அல்லாஹுத் தஆலா நமக்குக் கடமையாக்கினான். அன்றி தொழுகையின் கோலத்தைக் காண்பிப்பதில் பிரயோஜனம் ஏதுமில்லை.

105. அல்லாஹுத் தஆலா வெளியாகுவது உனக்கு சதா நேமமாயிருந்தால் நீ அதனைத் தாங்க முடியாது. உனக்கு

இயலாமை உண்டென அவன் அறிந்ததால் ஐம்பது நேரத் தொழுகைகளை ஐந்து நேரமாகக் குறைத்தான்.

அல்லாஹுத் தஆலாவுடன் நீ பிரியமாயிருப்பதற்காக அவன் கிருபை இரக்கத்தளவில் உனக்கு ஹாஜத்து (தேவை) உண்டென்று அறிந்திருப்பதால் தொழுகையின் பலனை உனக்கு அதிகமாக்கினான்.

அதாவது ஐம்பது நேரத் தொழுகையின் பலனை ஐந்து நேரத்தில் அமைத்தான். மேலும் மேற்கூறிய இரகசியங்களையும் அறிவுகளையும் மஃரிபாக்களையும் தொழுகின்றவர்களின் கல்பில் உதிக்கச் செய்கிறான்.

106. உன்னுடைய தொழுகை-நோன்பு போன்ற அமல்களுக்கு துன்யாவிலோ அல்லது ஆகிரத்திலோ கூலி வேண்டுமென்று அல்லாஹுத் தஆலாவிடம் நீ கேட்டால் அந்த அமல்கள் உண்மையில் அல்லாஹுத் தஆலாவிற்குள்ளது தானா வென்று உன்னிடம் அவன் கேட்பான். பார்க்கின்ற போது அது கூலிக்காகத்தானிருக்கிறது; அல்லாஹுத் தஆலாவிற்காக இல்லை. அவ்வமயம் "நீ எனக்காக (அமல்களைச்) செய்யவில்லை; கூலிக்காகவே செய்தாயாகையால் இதற்கு தண்டனை இல்லாமலிருப்பதுவே உனக்குப் போதுமான கூலி; என்னிடம் நீ கூலி கேட்காதே! நீ ஸலாமத்தைப் பெற்றுக்கொண்டதே போதும்" என்று சொல்வான்.

107. அமல்களுக்குப் பிரதிபலனை நீ அல்லாஹுத் தஆலாவிடம் கேட்காதே! ஏனென்றால் நீ ஒன்றையும் செய்யவில்லை. உண்மையில் செய்கிறவன் அல்லாஹுத்

தஆலாவேயாகும். நீ அச் செய்கைகள் வெளியாகும் தானமேயின்றி வேறன்று. (அவ்வாறிருக்க) நீ செய்யாத வேலைக்கு எப்படி அவனிடம் பகரம் கேட்கிறாய்! (நீ செய்த) அவ்வேலைகளுக்கு குற்றம் சுமத்தாமல் அவன் ஏற்றுக் கொண்டதே உனக்குப் போதுமான கூலியாகும்.

108. அல்லாஹுத் தஆலா தன் கருணையை உன்னில் வெளியாக்க நாடினால் அந்த அமல்களை உன்னில் படைத்து உன்னளவில் சேர்த்து விடுவான். பார்ப்பவர்கள் உன்னை முத்தகீ என்றும் வழிப்பட்டவன் என்றும் சொல்வார்கள். இது அல்லாஹுத் தஆலாவால் கொடுக்கப்பட்ட கருணை எனத் தெரிந்து கொண்டோர் அம் மனிதன் செய்த நன்மை என்று சொல்ல வெட்கிப்பார்கள்.

109. அல்லாஹுத் தஆலா உன்னில் படைத்த அமல்களை நீ செய்ததாக நினைத்தால் உன் இழிநிலைக்கு ஒரு எல்லை இல்லை. அமல்களுக்கு அல்லாஹ் உதவி செய்யாதிருந்தால் உன்னால் எந்த வேலையும் செய்ய இயலாது. மேலும் அவனது சந்நிதானத்தை விட்டும் விரட்டப்படுவாய்.

அல்லாஹுத் தஆலாவின் நன்கொடையை உன் பேரில் அவன் வெளியாக்கினால் உன் புகழுக்கும் எல்லை இல்லை. ஆகவே உன்னையும் உனது வேலைகளையும் அல்லாஹுத் தஆலாவில் கொழுகி அவனளவில் சேர்வது கொண்டல்லாமல் ஈடேற்றத்திற்கு வழியில்லை.

ஆகவே எஜமானத்துவத்தின் இலட்சணங்கள் அடங்கலும் அவனுக்கவுள்ளவை என்றெண்ணி அவனைக் கொழுகி

அடிமைக் குணடமடங்கலும் உனக்குள்ளவை என்றும் திடப்படுத்திக்கொள்.

110. சிருஷ்டிகளுக்கு அல்லாஹுத் தஆலா கொடுத்த பொருள் போன்றவைகளை உங்களுக்குறியன என்று நீங்கள் தாவா செய்வதை அல்லாஹுத் தஆலா விலக்கினான். அவன் உலகைப் படைத்து வளர்ப்பவனாய் இருக்க அவன் குணங்களை உங்களுடையது என்று தாவா செய்வது ஆகுமா?

ஆகவே ஒரு மனிதன் நான் ஆலிம்-நான் திராணி உள்ளவன் என்றும் இவைகள் போன்றவைகளைச் சொல்வதும் கல்பின் பாவங்களில் பெரும் பாவமாகும்.

111. வழமைக்கு மாற்றமாகிய கராமத்து போன்றவைகள் உனக்கு எப்படி உண்டாகும்? நீ இது வரையில் உனது நப்ஸின் குணங்களாகிய பெருமை-பொறாமை போன்ற கெடுதிகளிலிருந்து விலகவில்லை. எம் மனிதன் தன்னை விட்டும் தன் நப்ஸின் இச்சைகளை விட்டும் விலகவில்லையோ கராமத்துகளைக் கொண்டு அல்லாஹுத் தஆலா அவனை சங்கையாக்க மாட்டான். அவ்விதம் ஏற்பட்டாலும் கூட அது சதியும், அல்லாஹ் விட்டுப் பிடிக்கின்றதுமாகும். அதைப் பயப்படவேண்டும்.

112. அல்லாஹுத் தஆலாவிடம் உங்களுடைய ஹாஜத்துகளைக் கேட்பது பெரிதல்ல! அவனிடம் நல்ல ஒழுக்கத்துடன் இருப்பதுதான் மேலானது. அதாவது உங்கள் அடிமைத்துவத்தை வெளியாக்குவதற்காகக் கேட்க வேண்டும். அல்லது உங்கள் ஹாஜத்துகளை அவன் அறிந்திருக்கிறான்;

(அவ்வாறிருக்க) அதை ஏன் கேட்க வேண்டும்? அவ்வாறு கேட்பது அவனைப் பற்றி நல்லெண்ணமில்லை என்பதைக் காட்டுகிறதல்லவா?

113. நீ ஒரு வஸ்துவை நாடி மன சஞ்சலப் படுவது போல் எந்த வஸ்துவும் அவனிடம் கேட்கக் கூடியதில்லை. அவனுக்குத் தலை சாய்ப்பதும்–அடிபணிவதும் போல் உனக்கு ஹாஜத்துகளைத் தீவிரமாகக் கேட்கக் கூடிய வஸ்துக்களுமில்லை.

அதாவது உனது மனதில் சஞ்சலமில்லாமல் அவனிடம் கையை ஏந்தினால் "ஹாஜத்து நிறைவேறும் துஆ" என்று சொல்ல முடியாது. மன சஞ்சலத்துடன் சாளையப்பட்டு தலைசாய்த்து எப்போதும் மனதில் அக்காரியம் குடிகொண்டு அவன் முன்னிலையில் இருப்பது தான் தீவிரமாக ஹாஜத்துகள் நிறைவேறும் துஆ.

114. உன் நப்ஸின் குறைகளையும் உனது தத்துவம் சங்கை போன்றவைகளையும் ஒழித்தாலல்லாது அல்லாஹுத் தஆலாவிடம் சேரமுடியாது என்று நினைத்தால் ஒரு போதும் அவனிடம் நீ சேர முடியாது. ஏனெனில் இவைகளை ஒழிப்பது உன் சக்தியினால் என்ற கருத்து வெளியாகிறது. அது நப்ஸின் கெடுதியாகும். ஆகவே உன்னை அவனளவில் சேர்த்துக் கொள்ள நாடினால் அவனது குணத்தைக் கொண்டு உனது குணத்தை மூடி மறைத்துக் கொள்வான். அப்போது அவனுடைய நிஃமத்தினால் உன்னை தன்னளவில் சேர்த்துக் கொண்டானே அன்றி உன் நிஃமத்தினால் அல்ல.

115. உனது அமல்களில் மறைவானதும்-வெளியானதுமான எவ்வளவோ குறைகளிருக்கும். இவைகளை எல்லாம் அல்லாஹுத் தஆலாவின் கிருபை எனும் அழகிய மறைப்பு இல்லாவிட்டால் அந்த அமல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்குத் தகுதியாயில்லை. ஆகவே அமல்களின் காரணத்தால் எவ்விதத்திலும் அவனிடம் சேர முடியாது; அவன் இரக்கமெனும் கருணை தான்(நமக்கு) வேண்டும்.

116. அல்லாஹுத் தஆலாவிற்கு ஏதேனுமொரு வகையில் மாறு செய்தால் அவனுடைய இரக்கத்தளவில் ஹாஜத்தாவதே மேல். ஏனெனில், உன்னில் நின்றும் ஏதேனும் பாவம் ஏற்பட்டால் நீ மிகவும் கவலைப் பட்டு மனச் சோர்வடைந்து அவன் முன்னிலையில் தலை குனிந்து சாளையப்பட்டு நிற்பாய்!

அவனுக்கு நீ வழிப்பட்டால் "நான் அவனுக்கு நன்மை செய்து விட்டேன்" என்ற தற்பெருமை கொண்டு பிறரைக் கேவலமாய்க் கருதி நீ கூலிக்குப் பாத்தியப்பட்டவன் என்று எண்ணுவாய்!. அப்போது உனது நன்மை தீமையாக மாறிவிடுமென்பதை பயப்படப்படுகிறது. ஆகவே அவனுடைய இரக்கம்-மன்னிப்பு அளவில் நீ தான் அதிகம் தேவையாகக் கூடியவன்.

117. அறிவு ஞானமற்ற பொது ஜனங்கள், ஏதாகிலுமொரு பாவமான காரியங்களைச் செய்தால் அதை மறைக்கும் படி அல்லாஹுத் தஆலாவிடம் துஆ கேட்பார்கள். ஏனெனில் ஜனங்களுக்குத் தெரிந்தால் தன்னுடைய மதிப்பு போய்விடும் (இன்னும்) அவர்களின் உபகாரம் ஒத்தாசைகள்

இல்லாமற் போய்விடும் என்பதைப் பயந்து அவ்விதம் மறைக்கக் கேட்பார்கள்.

ஆகவே அவர்களின் எண்ணமும் கவனமும் மனிதர்களைப் பற்றியதாய் ஆகிவிடுகிறது. ஆனால் அல்லாஹுத் தஆலாவிற்குச் சொந்தமான அறிவு ஞானமுள்ள ஜனங்கள், பாவமான காரியங்கள் தங்கள் மனதுகளில் ஊசாடாமலும், அதன் பக்கம் சிந்தனைகள் செல்லாமலும் பாவங்களை விட்டும் மறைக்க அல்லாஹுத் தஆலாவிடம் துஆக் கேட்பார்கள். ஏனெனில் அல்லாஹுத் தஆலாவின் பொருத்தமெனும் பார்வையை விட்டு விழுந்து விடுவார்கள் என்பதைப் பயந்து மறைக்கக் கேட்பார்கள். ஆகவே இவர்களின் எண்ணமும் சிந்தனைகளும் அல்லாஹுத் தஆலாவைப் பயந்ததினால் இருக்கிறது.

இவ்விரு கூட்டத்தார்களின் நோக்கங்களுக் கிடையில் அதிக வித்தியாசங்கள் இருக்கின்றன. அதாவது ஒரு கூட்டத்தினர் சிருஷ்டிகளைப் பயந்தும் மற்ற கூட்டத்தினர் ஹக்கைப் பயந்தும் மறைக்கத் தேடுகிறார்கள்.

118. உனக்கு யாராகிலும் மரியாதை செய்தால் உன்னுடைய குறைகளை அல்லாஹுத் தஆலா மறைத்ததினால் தான் மரியாதை செய்தார்கள். ஆகையால் உன்னுடைய புகழும் நன்றியும் குறைகளை மறைத்தவனுக்கே அல்லாது மரியாதை செய்தவர்களுக்கில்லை. ஏனெனில் உன் குறைகளை அவர்கள் தெரிந்திருந்தால் மரியாதை செய்திருக்க மாட்டார்கள்.

அல்லாஹுத் தஆலா மறைத்ததினால் அது ஏற்பட்டது. ஆகவே நன்றி அவனுக்கே(உரியது).

119. அல்லாஹுத் தஆலாவைத் தவிர வேறு எவரும் உன் குற்றங் குறைகளைத் தெரிந்து கொண்டும் உன்னிடம் சிநேகமாயிருக்க மாட்டார்கள்.

உன்னில் நின்று ஒன்றையும் எதிர் பாராமல் சிநேகிதத்திற்கு உன்னைத் தேடுபவன் தான் உண்மையான சிநேகிதன். அவ்விதம் சிநேகிதத்தைத் தேடுபவன் அல்லாஹுத் தஆலா தான். அவன் தான் உன்னுடைய குறைகளைத் தெரிந்தும் அவனுக்கு நோவினை இழைத்தும், உன்னில் நின்றும் எவ்வித பிரயோஜனங்களை எதிர்பார்க்காமல் சிநேகம் வைப்பவனும்-நிஃமத் உபகாரங்களைப் புரிபவனும் ஆவான். ஆகவே நீயும் அவனையே சிநேகிதனாக ஆக்கிக் கொண்டு மற்றவர்களைத் தள்ளி புறக்கணித்து விடு! உனக்கு ஹக்கனே போதுமானவன்.

120. "நூருல் எகீன்" எனும் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டுள்ள அறிவு ஜோதி உனக்கு பிரகாசித்து விட்டால் "ஆகிரம்" எனும் மறு உலகமாகிறது உன்னைப் பார்க்கினும் உன்னளவில் நெருங்கியதாய்க் காண்பாய்!

துன்யா அதன் ஆபாசமெனும் அழுக்குகளின் மீது அழிவு என்னும் கிரணம் தீண்டி விட்டதாகக் காண்பாய். அதாவது நூருல் எகீன் என்ற அறிவாகிறது ஒவ்வொரு வஸ்துக்களின் உண்மையையும் அந்தரங்கங்களையும் அறியக் கூடியதாகும். அது ஒருவரின் கல்பில் உதயமானால் உண்மையை

உண்மையாகவும் போலித்தனமானவைகளை போலி என்றும் தெரிந்து கொள்ளும். ஆகவே இந்த உலகைப் பார்த்து இது பொய்த் தோற்றம்; இது அழிந்து விட்டது என்று தெரிந்து கொள்ளும் போது ஆகிரமாகிறது முன்னிலையில் எதிர்பட்டதாக இருப்பதாய் தெரிந்து கொண்டு அதற்கென ஆயத்தப் படுவார்கள்.

இந் நூர், கல்பில் நுழைந்ததற்கு அடையாளம் இவ்வுலகை விட்டு அகலுவதும் அழியாத உலகத்தளவில் மீளுவதும் "மௌத்து வருவதற்கு முன்பே அதற்குத் தயாராகுவதுமாகும்" என்று நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றார்கள்.

121. அல்லாஹுத் தஆலாவுடன் வேறொரு வஸ்துவிருந்து அவ்வஸ்து அல்லாஹுத் தஆலாவை விட்டு உன்னை மறைக்கவில்லை. அப்படியொரு வஸ்து உண்மையில் இல்லவுமில்லை. உன்னை அவனை விட்டும் மறைத்ததெல்லாம் அவனுடன் ஒரு வஸ்து உண்டென்ற உனது சந்தேகம் தான். எது போன்றெனில் நீ இரவில் வெளியே செல்ல நினைத்த போது ஜன்னல் வழியாகக் காற்றின் இரைச்சல் கேட்டு வெளியே புலி நின்று தான் இவ்விதம் சத்தம் போடுகிறது என்று நினைத்து பயந்து வெளியே செல்லாமல் இருந்து விட்டாய்! உண்மையில் அங்கு புலி இல்லை. உண்டென்ற நினைவு உன்னை வெளியே செல்வதை (விட்டு) தடுத்தது போன்று வேறென்ற நினைவு உன்னை அவனை விட்டு மறைத்தது.

122. அல்லாஹுத் தஆலாவிற்கு உலகமென்ற வெளியாகுதல் இல்லாவிடில் அவைகளில் பார்வை விழாது. ஆகவே இப்போது பார்வைக்குத் தெரியும் இவ்வுலகமானது அவனுடைய(தாத்) உண்மையில் நின்றும் இரவலாகத் தோன்றியவையாகும்.

அல்லாஹுத் தஆலாவிற்கு "வெளியானவன்" என்ற குணம் துலங்கும் போது, உலகம் என்ற சிருஷ்டிகள் அனைத்தும் அவனில் மறைந்து அவனின்றி ஒன்றுமில்லை என்றாகி விடும். அந்த இடத்தில் உலகமும் பார்ப்பவனும், பார்வையும்-கண்ணும் அவனுடையதாகியும் அவனாகியும் மறைந்து விடுகிறது.

123. அல்லாஹுத் தஆலாவிற்கு "மறைந்தவன்" என்றும் "வெளியானவன்" என்றும் இரண்டு திருநாமங்கள் உள்ளன. அவ்விரண்டு திருநாமங்களில் மறைந்தவன் என்பதைக் கவனிக்குமிடத்தில் சிருஷ்டிகள் வெளியானதாகவும்-அவன் "வெளியானவன்" என்பதைக் கவனிக்குமிடத்தில் சிருஷ்டிகள் அவனில் மறைந்ததாகவும் விளங்குகிறது.

ஆகவே கண்ணோட்டமும் தோற்றமும் நம்மில் வித்தியாசப்படுகின்றதே அன்றி அவனில்-தாத்தில் எந்த வித்தியாசமும் ஏற்படுவதில்லை. (இவ்விதமான இடங்களில் தாறுமாறாக விளங்காமல் விளக்கமுடையவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள். நீயாகவே நினைத்தோ கருத்து விளங்காமலோ கெட்டுப் போகாதே!)

124. அல்லாஹுத் தஆலா உனக்கு சிருஷ்டிப் பொருள்களில் அவனின் உண்மையை கவனிக்க ஏவுகிறான். சிருஷ்டிகளின் வெளிப்படையைப் பார்த்து அத்தோடு நின்று விட அனுமதிக்கவில்லை. அதாவது வானத்தில் என்ன இருக்கிறதென்று பாருங்கள்? என்று குர்ஆனில் கூறுகிறானேயல்லாது வானத்தைப் பாருங்கள் என்று சொல்லவில்லை. அவ்விதம் சொன்னால் வானத்தின் ஜடலத்தைப் பார்த்து வேற்றுமைப்பட்டு அல்லாஹுத் தஆலாவைவிட்டும் தூரப்பட்டு விடுவான். அதன் அந்தரங்கத்தைக் கவனித்தால் விளக்கமென்ற வாயல் திறக்கப்பட்டு தன் நோக்கத்தளவில் சேர்ந்து கொள்வான்.

125. உலக சிருஷ்டிப் பொருள்களனைத்தும் அல்லாஹுத் தஆலாவின் உள்ளமையைக் கொண்டு தரிபாட்டுடையவைகளாகும். அவன் ஏகன் என்பதை மட்டும் கவனிக்குமிடத்தில் எல்லாம் அவனில் லயித்து இல்லாமலாகி விடுகின்றன. இதற்குச் சான்றானதொரு உதாரணம் "அவன் தாத் கடல் போலும் அதன் அலைகள் சிருஷ்டிகளைப் போலுமாகும்."

அதாவது அலைகளை கடல்தான் என்று சொல்ல முடியாது. எனெனில் கடல் என்ற பெயரை விட்டு அலை எனும் பெயரை எடுத்துக் கொண்டது. கடலல்ல என்றும் சொல்ல முடியாது. ஏனெனில் கடலில்லாமல் வேறொன்றும் அங்கு இல்லை.

இக் கருத்தை பலவிடங்களில் பலவிதமாகச் சொல்லப்படுவது எதற்கென்றால் "ஹக்கையும்–கல்கையும்" தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகத் தான்; அதனால் சடையாதே!

126. உன்னில் வெளியான நல்ல குணங்களைப் பார்த்து ஜனங்கள் உன்னைப் புகழ்வார்கள். அப்போது அதைப் பார்த்து நீ மிரண்டு விடாமல் உன்னை நீ பழித்துக்கொள்! ஏனெனில் உன்னிலுள்ள அந்தரங்கம் உனக்குத் தெரிந்திருக்கிறது. ஆனால் அதிகமாகப் புகழாவிட்டால் புகழ்ந்தவரை பொய்யனாக்க வேண்டாம். நீ மிரண்டு போகாமலிருந்தால் போதும்.

127. உண்மையான ஒரு முஃமினை ஒருவன் புகழ்ந்தால் அல்லாஹுத் தஆலா நமக்களித்த நிஃமத்தை நமக்குரியது என்று நினைத்து நம்மைப் புகழ்கிறானே என்றெண்ணி அல்லாஹுத் தஆலாவிடம் வெட்கப்படுவான். ஏனெனில் புகழ்கிறவர் அல்லாஹ்வின் நிஃமத்து இவரில் வெளியாகி இருக்கிறதென நினைக்கவில்லையே! எனக்கில்லாததை என்னுடையதென்று கூறுகிறாரே என்று வெட்கம் அடைவார்!

128. தனக்கு புகழுக்குரித்தான எச்செய்கையுமில்லை என்று உறுதியாகத் தெரிந்திருந்தும் ஜனங்கள் புகழ்ந்தவுடன் அதை எண்ணி தன்னுடைய உறுதியான எண்ணத்தை விடுகிறவனைப் போல பெரிய அறிவிலி எவன் இருக்கிறான்? யாருமில்லை. இவன் அறிவற்றவன்; ஏனெனில் ஜனங்களின் எண்ணத்திற்காகத் தன் உறுதியை விட்டுவிட்டான்.

129. நீ தகுதி இல்லாமலிருக்க ஜனங்கள் உன்னைப் புகழ்ந்தால் அப்புகழுக்காகத் தகுதியுள்ளவனை நீ புகழ்! அதாவது நீ புகழுக்குத் தகுதியல்லாத குறையுடையவனாய் இருக்க அக்குறைகளை மறைத்து புகழச் செய்த அல்லாஹுத் தஆலாவை நீ புகழ்ந்து அவனுக்கே நன்றி செலுத்து; மிரண்டு விடாதே!

130. உலகத்தை வெறுத்து வாழும் ஜாஹிதுகளை யாரும் புகழ்ந்தால், "ஜனங்கள் நம்மைப் புகழ்கிறார்களே! இதனால் அல்லாஹுத் தஆலாவின் (நஸீபு) பாக்கியம் நமக்கு இல்லாமற் போய்விடுமே என்று பயந்து மனச் சோர்வு அடைவார்கள். ஏனெனில் இவர்கள் அல்லாஹுத் தஆலாவை தரிசிக்காமல் கல்குகளைத்தான் தெரிந்து கொண்டார்கள். ஆரிபீன்களை யாரும் புகழ்ந்தால், இது அல்லாஹுத் தஆலாவின் புகழென்று எண்ணி மன உற்சாகமடைவார்கள். ஏனென்றால் இவர்கள் எதிலும் ஹக்கைத் தவிர மற்றெதையும் காண்பதில்லை. "ஹக்கின் கலம் கல்கின் நாவாகும்" என்று தெரிந்து அவர்களின் நிலைமைகள் அதிகமாகுமேயல்லாது சாதாரண ஜனங்களைப் போன்று மிரண்டு போக மாட்டார்கள். இவர்களை யாரும் பழித்தாலும் இதே மாதிரி இருப்பார்களே அல்லாது மன நோவினை அடைய மாட்டார்கள்.

131. உனக்கு எப்போதாகிலும் ஒரு நன்கொடை கொடுக்கப்பட்டால் மன உற்சாகம் ஏற்பட்டு சந்தோஷமடையவும், கொடுக்கப்படாமலிருந்தால் மனச் சோர்வு அடையவும் செய்தால் உன்னில் சிறு பிள்ளைக் குணம் இருக்கிறது என்றும்,

உன்னுடைய அடிமைத்துவம் உண்மையானதில்லை என்றும் தெரிந்து கொள்! ஏனென்றால் இவ்வித இரு குணங்கள் அடைவது உன்னில் நப்ஸின் அம்சங்கள் இருக்கிறதற்கு அடையாளமாகும். அது உண்மையான அடிமைத்துவத்திற்கு முரணாகும்.

132. உன்னில் நின்றும் ஒரு பாவம் ஏற்பட்டுப் போனால் உன் ரப்புஉடனே செம்மையாயிருக்கத் தவறி விட்டோமே என்று அவன் ரஹ்மத்தை விட்டு நீ ஆதரவற்று விடாதே! இது உன்னில் ஏற்படுத்தப் பட்ட பாவங்களில் கடைசியானதாக இருக்கக் கூடும். ஆகவே இனிமேல் இவ்வாறு செய்யமாட்டேனென்று உறுதியாக எண்ணி தௌபாச் செய்து கொள்! ஆதரவற்றிருக்க வேண்டாம்.

133. உனக்கு அல்லாஹுத் தஆலாவின் அவிழ்க்கை எனும் வாயல் திறக்கப்பட வேண்டும் (அதாவது அவிழ்க்கை அதிகமாக வேண்டும்) என நினைத்தால் அவன் உனக்குச் செய்த உபகாரங்களை நினைத்துப்பார்! நீ தாய் வயிற்றிலிருந்து இதுவரையில் எவ்வளவு உபகாரங்களைப் பெற்றிருக்கிறாய்! எவ்வளவு கஷ்டங்களை உனக்குத் தடுக்கப்பட்டது என்பதைக் கவனி! அப்போது உனக்கு அவிழ்க்கை அதிகமாகி விடும்! ஆசை முறிவு ஏற்படாது.

அல்லாஹுத் தஆலாவின் பயம் எனும் வாயல் திறக்கப்பட வேண்டுமென்று நினைத்தால் நீ அவனுக்குச் செய்த விதர்ப்பங்களையும் விரோதங்களையும் நினைத்துப் பார்! பயம் அதிகமாகி பாவம் செய்ய மாட்டாய்.

134. மனக் கிட்டுமை எனும் இரவில் உனக்கு ஏற்படும் பிரயோஜனம் போல் மனச் சந்தோஷம் எனும் பகலில் எற்படாது. ஏனென்றால் மனக்கிட்டுமையாயிருக்கும் போது மனச் சோர்வடைந்து எப்போதும் அல்லாஹுத் தஆலாவின் முன்னிலையில் ஒடுங்கி இருப்பாய்.

மனச் சந்தோஷமாயிருந்தால் உனக்கு ஏற்பட்டுள்ள அறிவு போன்றவைகளை வெளியாக்கத் துடித்து வருவாய்! அதுவே திரையாவதற்குக் காரணம்.

ஆனால் இந்த இரு நிலைமைகளையும் அல்லாஹுத் தஆலாவிடம் ஒப்படைத்தவர்கள் இவ்விரண்டில் எது மிகவும் பிரயோஜனமானது என்று அறிய மாட்டார்கள்.

135. பிரகாசங்கள் உதயமாகும் ஸ்தானம் கல்புகளும் அஸ்றாருகளுமாகும். அதாவது ஆரிபீன்களின் கல்புகளும் அஸ்றாருகளும் வானத்தைப் போன்றாகும். அந்த வானத்தில் தான் இல்மு என்ற நட்சத்திரமும்-மஃரிபா என்ற சந்திரனும்-தௌஹீது என்ற சூரியனும் வெளியாகிறது. ஆனால் வானத்தில் உதயமாகும் சூரியனுக்கும்-சந்திரனுக்கும் கிரகணம் தீண்டுவதும் மறைவதுமுண்டாகும். (ஆயினும்) ஆரிபீன்களின் இதயங்களில் ஏற்படும் இப்பிரகாசங்களுக்கோ (எவ்வித) மறைவும் கிரகணமும் ஏற்படுவதில்லை.

136. ஆரிபீன்களின் கல்புகளில் ஏற்படுத்தப் பட்ட பிரகாசங்களுக்கு மறைமுகமான கஜானாக்களிலிருந்து உதவி கிடைக்கிறது. அதாவது அல்லாஹுத் தஆலாவின் குணங்களைக் கொண்டு அவன் வெளியாகும் போது கல்பில் ஏற்பட்ட

பிரகாசங்கள் அதிகமாகிறது. இது அவனின் உபகாரங்கள் அவர்களுக்குண்டென்பதற்கு ஓர் அடையாளமாகும்.

137. கல்புகளில் ஏற்படும் பிரகாசங்கள் இரு வகைப்படும். ஒன்று; வானத்தின் மேலிருந்து பூமிக்குக் கீழ்வரையிலுமுள்ள அடியார்களின் நிலைமைகளைத் தெரிந்து கொள்ளுதல். இதற்கு "கஷ்பஸுவரி" கோலம் வெளியாகுதல் என்று சொல்லப்படும். இரண்டாவது அல்லாஹுத் தஆலாவின் ஜமால்-ஜலால் என்ற குணம் வெளியாகுதல். இதற்கு கஷ்ப-மஃனவி, உண்மை வெளியாகுதல் என்று சொல்லப்படும். இதுவேதான் எண்ணப்பட்டதும் நாடப்பட்டதுமான கஷ்பாகும்.

அல்லாஹுத் தஆலாவின் தாத்து வெளியாகுவதில் பலர் பல மாறுபட்ட அபிப்பிராயமாயிருக்கிறார்கள். (அதில்) ஷெய்கு முஹ்யித்தீன்(ரலி) அவர்கள் வெளியாகும் என்று சொன்னார்கள். (எனினும்) அதைத் தாங்க சக்தி இல்லாததால் உடன் மறைந்திடும். ஆதலால் அதற்கு "பவாரிகு" என்று சொல்லப்படுமெனவும் சொன்னார்கள்.

138. அல்லாஹுத் தஆலாவைத் தெரிந்து கொள்வது கஷ்டமாயிருப்பது போன்றே அவனது அவ்லியாக்களைத் தெரிந்து கொள்வது கஷ்டமாயிருக்கிறது.

அது போன்றென்ன? அதைவிட அதிகமாகவே கஷ்டமாகவிருக்கிறது. ஏனெனில் அல்லாஹுத் தஆலாவை அவனது நாமங்களாலும் குணங்களாலும் தெரிந்து கொள்ளலாம். அவ்லியாக்கள் சாதாரண மனிதர்களைப் போன்று, உண்டு-உடுத்தி-பருகி நடப்பதால் சாதாரண

மனிதர்கள் அவர்களைக் கண்டு கொள்ள முடியாது. ஆகவே அல்லாஹுத் தஆலாவைத் தெரிந்து கொள்வதும்-அவ்லியாக்களைத் தெரிந்து கொள்வதும், அல்லாஹுத் தஆலாவின் உதவியினாலேயே அல்லாது தங்களின் தத்துவங்களாலோ வணக்கங்களினாலோ முடியாது. அல்லாஹுத் தஆலா தன்னளவில் சேர்த்துக் கொள்ள நாடியவர்களைத் தவிர அவ்லியாக்களளவில் சேர்ப்பதில்லை. அத்தகைய அல்லாஹுத் தஆலா (மிகவும்) துாயவன்!

139. சில வேளை உனக்கு அல்லாஹுத் தஆலா வானம் பூமியில் மறைந்து கிடக்கும் விஷயங்களை வெளியாக்குவான். அடியார்களின் கல்புகளில் மறைந்து கிடக்கும் நன்மை-தீமை போன்றவைகளை உன்னை விட்டும் மறைத்து விடுவான். எவருக்கேனும் வெளியாக்கப்பட்டால் அடியார்கள் பேரில் அல்லாஹுத் தஆலாவின் பாவமன்னிப்பு, மறைத்தல் போன்ற கிருபைகளைக் கொண்டு குணம் பெற்றவர்களாயும் இருக்க மாட்டார்கள். ஆகவே அவ்விதம் வெளியாக்குவது அவர்களுக்குப் பித்னாவாகவும்-சோதனை-தனக்குத் தானே கஷ்டங்களை உண்டு பண்ணிக் கொள்வதாகவும் ஆகிவிடும். அதனால் மறைத்து வைப்பதே அல்லாஹுத் தஆலாவின் கிருபையாகும்.

140. பாவம் செய்வதில் நப்ஸுக்குள்ள ஆர்வங்களை வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளலாம்.

அதாவது, பாவம் செய்வதில் நப்ஸு மிக சுறுசுறுப்பாகவும் சந்தோஷமாகவும் எழுந்து வரும்.

அல்லாஹுத் தஆலாவிற்கு வழிப்படுகின்ற விஷயத்தில் அந்த நப்ஸின் ஆர்வம் மிக மறைவானதாகும். அகப்பார்வையுள்ளவர்கள் தான் அதைக் கண்டு கொள்ள முடியும். சாதாரண மனிதர்கள் பார்க்கின்ற போது வணக்கத்தின் வெளிப்படை நோக்கம் அல்லாஹுத் தஆலாவில் முடுகுவதாகத் தெரியும் நன்றாகக் கவனிக்கும் போது அவ்வணக்கத்தின் இரகசியம் ஜனங்கள் தன்னளவில் முன்னோக்குவதும் அவர்களுக்கிடையில் தான் பிரபல்யம் அடைவதுமாகவிருக்கும். ஆகையால் அவ்விதம் மறைந்து கிடக்கும் வியாதிகளுக்கு வைத்தியம் செய்வதும் அவ்வியாதியைக் கண்டு பிடிப்பதும் மிகக் கஷ்டமாகும். நன்றாக நப்ஸை சோதனை செய்து பார்த்தால் தான் தெரியும். ஆகையால் நப்ஸை அதன் போக்கில் விட்டு விடாமல் நன்றாகக் கவனிப்பாயாக.

141. உன்னுடைய அமல்களை மனிதர்கள் பார்த்து மெச்ச வேண்டுமென்ற முகஸ்துதி உனக்கு உண்டாவது போன்று–உன்னுடைய அமல்களைப் பார்க்கக் கூடாதென்று நீ நினைப்பதும் முகஸ்துதியேதான். ஆனால் முந்தியது வெளிப்படையானது. இரண்டாவது மறைவான முகஸ்துதி. ஆகவே இவ்விரண்டுமே இருக்கக் கூடாது. அல்லாஹ்விற்கென்ற ஒரே நோக்கம் தான் இருக்க வேண்டும். அது சாதாரணமாக ஆரிபுகளால் தான் இயலும்.

142. உனக்கு அல்லாஹுத் தஆலா தந்த ஸாலிஹான அமல், பிரயோஜனமான இல்மு போன்றவைகளை மனிதர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டுமென்று நீ

பிரியப்படுவது உனது அடிமைத்துவத்தில் நீ உண்மையாளி இல்லை என்பதைக் காட்டுகிறது. உண்மையாளியாயிருந்தால் நாயன் அறிவது போதுமென்று நினைத்திருப்பாய்!

143. அல்லாஹுத் தஆலா உன்னைப் பார்க்கிறதினால் மனிதர்கள் உன்னைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணத்தை விட்டு விடு! அவர்களின் பக்கம் திரும்பாதே! அந்த எண்ணம் உன் மனதில் ஊசலாடவே வேண்டாம். அல்லாஹுத் தஆலா உன்னளவில் முன்னோக்குகிறான்; ஆகையால் ஜனங்கள் முன்னோக்க வேண்டுமென்பதை விட்டு நீ மறைந்து விடு! உன்னுடைய நாட்டமும்-தேட்டமும்-திரும்புதலும் அவனளவிலே அன்றி வேறு எவர் பக்கமும் இருக்க வேண்டாம்.

144. சரியாக ஒருவன் அல்லாஹுத் தஆலாவை அறிந்தால் எல்லா வஸ்துக்களிலும் அல்லாஹுத் தஆலா வெளியாகி இருப்பதைக் காண்பான்! அப்போது எந்த வஸ்துக்களையும் வெறுக்க மாட்டான். அதனால் எல்லா வஸ்துக்களையும் பிரியப்படுவான்.

145. அல்லாஹுத் தஆலாவில் ஒருவன் லயித்து விட்டால் எல்லா வஸ்துக்களை விட்டும் மறைந்திடுவான். அல்லாஹுத் தஆலாவைத் தவிர மற்றொன்றையும் பார்க்க மாட்டான். பார்ப்பவை எல்லாம் அவனாகவே தான் தெரியும். தன்னையும் அவ்விதமாகவேதான் தெரிவான். பனாவென்ற லயிப்புக்குப் பின் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு தெளிந்து கொண்டால் அப்போது ஹக்கையும்-கல்கையும் வேற்றுமை இல்லாமல் தெரிந்து கொள்வான்.

146. அல்லாஹுத் தஆலாவை ஒருவன் பிரியப் பட்டால் அவனைப் பார்க்கிலும் மற்றொன்றைத் தேர்ந்தெடுக்க மாட்டான். அவைகளை மனம் ஆசிக்கவோ நாடவோ செய்யாது.

147. அல்லாஹுத் தஆலா உன்னை விட்டும் மறைந்திருக்கிறானென நீ நினைப்பது உன்னோடு அவன் மிக நெருங்கி இருப்பதாலும் அவனின் வெளியாகுதலின் அபரிமிதத்தினாலுமே அன்றி உண்மையில் அவன் மறைந்தவன் அல்ல. கைவிரல்களை கண்ணில் தொடுகின்ற அளவிற்கு முடுக்கி வைத்தால் விரல்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை. இதே போன்று அவன் நம்மளவில் முடுகி இருக்கிறான். மேலும் அவன் நம் கண்பார்வைக்குத் தெரியாமலிருப்பது அவனின் பிரகாசம் அதிகமானதினாலாயிருக்கும். சூரியப் பிரகாசத்தின் சக்தியினால் அதை பார்க்க முடியாமற் போனது போன்று- அவனையும் பார்க்க இக் கண்ணுக்கு சக்தி இல்லையே ஒழிய- அவன் மறைந்தவனல்ல.

148. அல்லாஹுத் தஆலா உனக்குத் தரும் நன்கொடைகள் உன்னுடைய துஆவினாலோ இபாதத்துகளினாலோ இல்லை. துஆவினால் தான் கிடைத்ததென நீ நினைத்தால் அவனைப்பற்றி நீ நல்லவிதமாகத் தெரிந்து கொள்ளவில்லை. அவன் "உன்னிடம் துஆ கேட்கவும்- வணங்கவும் ஏவி இருப்பது அவன் நாயன் என்றும் நீ அவனின் அடிமை என்றும் வெளிப்படுத்துவதற்காகத்தான்". இன்றேல் "முந்தியே அளிக்கப்பட்ட நன்கொடைக்குப் பின்னால் நிகழும் துஆ எப்படி காரணமாகும்?"

அவனின் கொடை ஆதி முதலில் ஏற்பட்டது! ஆதியிலேற்படும் சட்டங்களுக்குக் காரணம் உண்டாகி இருப்பதில்லை. காரணமிருந்தால் அக் காரணம் முந்தியதாயும் அவனது சட்டம் பிந்தியதாகியும் விடும். அவ்விதமாயிருப்பதை விட்டும் அவனின் சட்டம் மகாத் தூயது.

149. அல்லாஹுத் தஆலாவின் உபகாரங்கள் உனக்கேற்பட்டது அவனுடைய கலப்பற்ற கருணையும் நிஃமத்தினாலுமே யொழிய நீ அவனுக்குச் செய்த நன்மையினாலல்ல! அவனுடைய உபகாரங்கள் உன்னை ஆதியில் எதிர் நோக்கி வந்த போது நீ எங்கிருந்தாய்? நீ உண்டாகவே இல்லை; அப்படி இருக்க உனக்குக் கலப்பற்ற இபாதத்தும் துஆவும் எங்கிருந்தது? ஒன்றுமில்லை. ஆகவே அவனது கிருபையினாற்றான் உனக்கு உபகாரம் ஏற்பட்டதே அன்றி உன்னுடைய நன்மைகளினால் அல்ல.

150. எல்லா அடியார்களும் அல்லாஹுத் தஆலாவின் கிருபையுடைய இரகசியம் வெளியாக வேண்டுமென்று பிரியப்படுவார்கள் என்று அல்லாஹுத் தஆலாவுக்குத் தெரிந்ததால் அவன் நாடிய பேர்களுக்கு மட்டும் அவனுடைய ரஹ்மத்தைச் சொந்தமாக்குவான் என்று குர்ஆனில் கூறிவிட்டான். இன்னும் அவன் நாடிய பேர்களில் உள்ளவன்தான் நான் என்று நினைத்து சிலர்கள் அமல்களை விட்டு விடுவார்கள் என்று அல்லாஹுத் தஆலா அறிந்ததால் அல்லாஹ்வின் ரஹ்மத்தாகிறது "முஹ்ஸினீன்" எனும் "தக்வா"தாரிகளைச் சேர்ந்ததாயிருக்குமென்று குர்ஆனில்

கூறிவிட்டான். அதாவது மனிதர்களை அல்லாஹுத் தஆலா படைப்பதற்கு முன்பே அவன் நல்லவன் அல்லது கெட்டவன் என்று ஏற்படுத்தி இருப்பான்; அதன்படிதான் நடக்குமென்று நினைத்து இபாதத்துகளை விடாமலிருக்க "என்னுடைய" ரஹ்மத்து நான் நாடியவர்களுக்குத்தான்" எனச் சொன்னான். அப்போது மனிதர்கள் ஒவ்வொருவரும் அவன் நாடியவர்களில் உள்ளவன்தான் நானென்று நினைப்பார்கள் என்று நினைத்து "அந்த ரஹ்மத்துடையவர்களுக்குரிய அடையாளங்களைக் கூறிவிட்டான்." அதாவது எனது ரஹ்மத்து முஹ்ஸினீன்களைச் சேர்ந்ததாகும். அதாவது அல்லாஹுத் தஆலாவுக்கு இபாதத்தை அழகாக்கி வைத்தவர்களுக்காய் இருக்கும் என்று கூறிவிட்டான். ஆகவே ஆதியேற்பாட்டின் பேரில் நம்பிக்கை வைத்து இருக்கவும், அதைத் தெரிந்து கொள்ளவும் முடியாதென்றாகி விட்டது. எல்லா வஸ்துக்களும் அவனுடைய நாட்டத்தளவில் சேருமே அல்லாது அவன் நாட்டம் வஸ்துகளைச் சேர்வதில்லை.

151. அல்லாஹுத் தஆலா ஏற்படுத்திய பங்கீட்டின் மீது நம்பியதற்காகவும்–அவனுடைய திக்ருகளைக் கொண்டு பராக்காவதற்காகவும், அவனிடம் துஆ கேட்காமலிருப்பது அதபு என்று சில ஆரிபீன்களுக்கு அல்லாஹுத் தஆலா அறிவித்திருக்கிறான். ஏனெனில் கேட்பவனின் நிலைமை தெரியாதவனிடமும் மதிமயக்கம் என்னும் மறதி ஏற்படுகிறவனிடமும்தான் துஆ கேட்பது கொண்டு நினைப்பூட்ட வேண்டும். அல்லாஹுத் தஆலாவுக்கு அவ்விதமொன்றும் ஏற்படுவதில்லை. ஆகையால் துஆ கேட்காமலிருப்பது அதபு

என்று சிலர் சொன்னார்கள். அதாவது, ஆரிபீன்களின் மன நிலைமையும் நேரங்களும் பலவிதமாக இருக்கும். சில நிலைமையில் கேட்பது நலமென்பார்கள். சில நிலைமையில் கேட்காமலிருப்பது அதபு என்பார்கள். சில நிலைமையில் கேட்பதும் கேட்காமலிருப்பதும் சரி என்பார்கள். இது அவரவர்களின் நிலையைப் பொறுத்தது.

152. ஏழ்மைத்தனம் வருவது முரீதுகளுக்கு பெருநாளாயிருக்கும். அதாவது சாதாரண மனிதர்கள் பெருநாளில் அழகான வஸ்திரங்கள் அணிவது, ருசிகரமான சாப்பாடுகள் சாப்பிட்டுச் சந்தோஷம் கொண்டாடி தங்களின் இச்சைகளை நிறைவேற்றிப் பூரிப்பு கொள்வது போன்று அல்லாஹுத் தஆலாவை நாடி நடப்பவர்களுக்கு ஏழ்மைத் தனம் வரும் போது தங்களின் நப்ஸு ஒடுங்கி தலை குனிந்து எப்போதும் அல்லாஹுத் தஆலாவின் சன்னிதானத்தில் மனம் ஆஜராகி தங்களின் நாட்டங்களை அடைந்து கொள்கிறார்கள். ஆகவே இது அவர்களுக்குப் பெருநாளைப் போன்றிருக்கிறது.

153. முரீதே! சில வேளை நீ தொழுகையிலும் நோன்பிலும் பெற்றுக் கொள்ளாத மஃரிபா கல்பின் பிரகாசம் போன்றவைகளை அதிகமாக உன்னுடைய ஏழ்மைத்தனத்தில் நீ பெற்றுக் கொள்வாய்! ஏனெனில் தொழுகையும் நோன்பும் உன்னுடைய மன இச்சைகளுக்காகவும்–முகஸ்துதிகளுக்காகவும் ஏற்படலாம். அப்போது அந்த இபாதத்துகளைக் கெடுக்கும் ஆபத்துக்கள் வந்து நுழைந்து விடும். ஆனால் ஏழ்மைத் தனத்தில் மனம் குன்றி வருத்தத்துடன் அவன் முன்னிலையில்

நிற்கும் போது இவ்வித கெடுதிகள் கல்பில் நுழைவதில்லை. ஆகவே அவன் பெரிய பாக்கியங்களை அடைந்து கொள்வான்.

154. ஏழ்மைத்தனம் அல்லாஹுத் தஆலாவின் நன்கொடைகளுக்கு ஒரு விரிப்பைப் போன்றிருக்கிறது. அதாவது ஒரு ராஜனுடன் ஒருவன் விரிப்பில் இருந்தால் உலக நன்கொடைகளை அந்த ராஜா அவருக்குக் கொடுப்பது போன்று ஒரு முரீது ஏழ்மைத்தனத்தால் எப்பொழுதும் அல்லாஹுத் தஆலாவுடனேயே இருப்பான். அவனை விட்டு விலகியிருப்பதை ஏழ்மைத்தனம் தடுக்கிறது. ஆகவே எப்பொழுதும் அவன் சன்னிதானத்திலேயே இருப்பதால் அவன் நன்கொடையாகிய மஃரிபா-நூருல் கல்புகளைக் கொடுத்து விடுவான். ஆகையால் அவனின் நன்கொடைகளை நீ நாடினால் உனது ஏழ்மைத்தனத்தையும்-சரிபடுத்திக் கொள்ளவும். ஏனென்றால் ஸதகாக்கள் ஏழைகளுக்குத் தான் என்று அல்லாஹுத் தஆலா குர்ஆனில் கூறுகிறான். உன்னுடைய அடிமைத்துவத்தின் குணங்களை நீ உண்மைப்படுத்து! அப்போது அவனின் குணங்களைக் கொண்டு உனக்கு உதவி செய்வான். அதாவது உனது ஏழ்மைத்தனத்தை உண்மைப்படுத்து! அவனுடைய கருணை எனும் குணத்தைக் கொண்டு உனக்கு உதவி புரிவான். அப்போது அவன் சங்கை கொண்டு நீ சங்கை உள்ளவனாய் ஆவாய்! உனது இயலாத் தன்மையை உறுதிப்படுத்து! அதாவது உனக்கு இயலாத்தன்மைதான் உள்ளது என்று உறுதியாயிரு! அவனது தத்துவத்தைக் கொண்டு உதவி செய்வான். அப்போது

அவனது தத்துவத்தைக் கொண்டு நீ தராணி பெற்றவனாய் ஆவாய்! உன் தத்துவத்தினாலல்ல. இன்னும் உன்னுடைய பலஹீனத்தை முடிவு செய்! அவனது பலத்தைக் கொண்டு உன்னை பலப்படுத்துவான்! அப்போது அவனால் நீ பலமுள்ளவனாய் ஆவாய்! இதனைப் போன்று உனது எல்லா குணங்களையும் அவனிடம் ஒப்புவித்து விடு. அவனது குணங்களைக் கொண்டு நீயும் குணம் பெற்றுக் கொள்வாய்.

155. சில மனிதர்களுக்கு அல்லாஹுத் தஆலா, இஸ்திகாமத்து(சரியாகவிருப்பது) நிரப்பமாவதற்கு முன்னாலேயே கராமத்தைக் கொடுப்பான். அது சிலவேளை இவனுக்கு முன்னேறுவதற்கு உதவியாகி விடும். சிலவேளை விட்டுப் பிடிப்பதற்காகவுமிருக்கும். ஆகவே முரீதுகள் அதைக் கவனிக்கவும்-விரும்பவும் கூடாது. உண்மையான கராமத்து ஷரீஅத்தின் படி வெளியிலும் உள்ளிலும் சரியாய் நடப்பதுதான்.

156. அல்லாஹுத் தஆலா உன்னை ஒரு வேலையில் ஏற்படுத்தி இருக்கிறான் என்பதற்கு அடையாளம் அவ்வேலையில் நேமமாக இருப்பதும் மார்க்க விஷயத்தில் குறைகளேற்படாமல் அவ் வேலையை வெற்றிகரமான பிரயோஜனத்தோடு கஷ்டப்படாமல் நடப்பதுமாயிருக்கும். ஆகவே அவ்விதமான வேலையிலிருந்து தானாக வெளியேறுவதற்கு நினைக்கக் கூடாது. இக்கருத்துக் கொண்ட வசனம் முன்னால் வந்திருக்கிறது.

157. ஒரு மனிதன் தன்னுடைய இல்மினாலும் அமல்களினாலும் ஏற்பட்ட தன்னுடைய இஹ்ஸான் எனும் ஞான விஷயங்களை ஜனங்களுக்குச் சொல்லவும் உபதேசிக்கவும் செய்யும் போது தன்னிலிருந்து ஏதாகிலும் குற்றங்கள் ஏற்பட்டால் தான் வெட்கமடைந்து உபதேசத்தை நிறுத்தி விடுவான். அல்லாஹுத் தஆலா தனக்குச் செய்த இஹ்ஸானினால் ஒருவர் வார்த்தையினால் தன்னில் நின்றும் குற்றம் ஏற்பட்டாலும் கூட உபதேசத்தை நிறுத்த மாட்டார். அதாவது ஜனங்களுக்கு உபதேசம் செய்பவர்கள் இருவகையினராவார்கள். ஒன்று–உலமாக்கள். இவர்களில் குற்றம் ஏற்படும் போது வெட்கித்து அக்குற்றம் அவர்களின் நாவை ஊமையாக்கி விடுகிறது. பேச்சு நின்று விடும். இரண்டு–ஆரிபுகள்; இவர்கள் அல்லாஹுத் தஆலாவின் உதவியால் தன்னுடைய இஹ்ஸான் என நினையாமல் பேசக் கூடியவர்கள். இவர்களில் குற்றம் ஏற்பட்டாலும் கூட அதை தான் செய்ததாக அறிவதில்லை. ஆகையால் அவர்களின் நாவு மழுங்காது; தைரியமாகவே பேசுவார்கள்.

158. ஹுகமாக்கள் என்ற ஆரிபுகள் ஜனங்களுக்கு உபதேசம் செய்ய வேண்டுமென்று நினைத்தால் உபதேசிக்க ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே அவர்களின், கல்பின் பிரகாசங்கள் அல்லாஹுத் தஆலா அளவில் முன்னோக்கி; நாயனே! கர்மம் அடங்கலும் உன் கைவசமே இருக்கிறது. (நீயோ) கல்புகளின் அதிகாரியாகவுமிருக்கிறாய். (ஆகவே) அவர்களின் கல்புகளை உபதேசங்களை ஏற்றுக் கொள்ளத்

தகுதியாக்கு! என்று துஆ கேட்டு, அவனளவிலேயே பரம் சாட்டி விட்டு உபதேசிக்க ஆரம்பிப்பார்கள்.

அப்போது "வரண்ட பூமியில் மழை பெய்தால் செழிப்பது போன்று" அவர்களின் கல்புகள் உபதேசங்களை ஏற்றுக் கொள்கிறது". அந்த உபதேசம் அல்லாஹுத் தஆலாவின் பிரகாசத்திலிருந்து உண்டானதாகும். ஆகையால் அதற்கு குணபாடுகள் அதிகமாய் இருக்கிறது.

159. நாவாகிறது கல்பில் உள்ளவைகளை வெளியாக்கும் கருவியாகவிருக்கிறது. ஆகவே மனமானது துன்யா ஆசாபாசம் எனும் கலக்கங்களை விட்டும்-வேற்றுமை எனும் இருளை விட்டும் சுத்தமாக இருந்தால் அது பிரகாசித்து-அப்பிரகாசத்திற்குத் தக்கவாறு பேச ஆரம்பிக்கிறது.

அதனைக் கேட்பவர்களின் மனங்கள் பயமென்னும் அலைகளால் மோதி அதன் மூடிகள் திறந்து அல்லாஹுத் தஆலாவின் அழைப்பிற்கு ஜவாபு சொல்லும்.

ஆசாபாசத்தால் மனம் கருத்துப் போனவர்கள் நானுமொரு உபதேசி என தாவாச் செய்து கொண்டு உபதேசம் செய்தால் கேட்பவர்களுக்கு நிரப்பமான பிரயோஜனங்கள் ஏற்படாது. அவ்வாறு ஏற்பட்டாலும் கூட இந்த உபதேசத்தினால் அல்ல! அதன் உள்ளமையில் அல்லாஹுத் தஆலாவின் உதவி என்ற கருத்தில் நின்றும் தான் ஏற்படுகிறது. ஏனென்றால் "இந்த மார்க்கத்தை ஒரு கெட்ட மனிதனைக் கொண்டு அல்லாஹுத் தஆலா வலுவாக்குவானென"ச் சொல்லப்பட்டிருக்கிறது.

160. ஒரு மனிதனுக்கு ஞான விஷயங்களைப் பேச அல்லாஹுத் தஆலா அனுமதி கொடுத்திருந்தால் அம்மனிதனின் பேச்சை ஜனங்கள் நல்லவிதமாக விளங்கிக் கொள்வார்கள். அவர் சுட்டிக் காண்பிக்கும் விஷயங்களின் கருத்துக்களையும் நல்லவிதமாகப் புரிந்து கொள்வார்கள். பேச்சுக்களும் தடை இல்லாமல் யோசிக்காமல் வந்து கொண்டே இருக்கும்.

அவ்விதம் பேச அனுமதி கொடுக்கப்படாமல் பேசுவதாயிருந்தால் அவரில் நின்றும் வெளியாகும் பேச்சுக்கள் பிரகாசம் மங்கியதாக சூரியனுக்கு கிரகணம் தோன்றியது போல் வெளியாகும். அப்பேச்சை கேட்பவர்கள் விருப்பமில்லாமலும் வெறுப்புற்றவர்களாயுமிருப்பார்கள்.

இவ்விதமிருந்தும் அவர்கள் பேசுவது ஏனென்றால் அவர்களின் கல்பில் வரும் அறிவுகளைப் பேசித் தீர்க்காவிட்டால் மனம் நிம்மதி அடைவதில்லை; மனம் சங்கடமாயும் தெரியும். எது போன்றெனில் நிறை குடத்தில் தண்ணீரை ஊற்றுவதாயிருந்தால் அதிலிருக்கும் தண்ணீர் கீழே வடிந்துதானாக வேண்டியதிருக்கிறது. இதே மாதிரி தான் இவர்கள் பேசுவதும், அல்லது முரீதுகளின்(சிஷ்யர்களின்) ஹிதாயத்திற்காகப் பேசுவார்கள். இவர்களில் முந்திய தரத்துடையவர்கள் ஸாலிக்குகளும் - இரண்டாவது தரத்துடையவர்கள் அறிவில் தேர்ச்சி பெற்றவர்களுமாயிருப்பார்கள்.

161. ஆரிபீன்கள் செய்யும் உபதேசங்களும் அவர்களின் மஃரிபா விஷயமான பேச்சுக்களும்–ஆசையோடும் ஆவலோடும் கேட்பது அவர்களின் ஆத்மாவுக்கு உணவாயிருக்கும். நமது உடலுக்கு வெளி உணவு தேவைப்படுவது போன்றே ஆத்மாவுக்கு அந்தரங்கமான உணவு தேவையாயிருக்கிறது. ஆகவே நீ சாப்பிட்டதைத் தவிர (வேறு) உனக்கில்லை.

அதாவது உடலை வளர்க்கக் கூடிய சாப்பாடுகள் பலவகையாயிருக்கிறது. ஒருவருக்கு இஷ்டமானதும் உடலுக்கு ஏற்றுக் கொள்ளக் கூடியதுமான உணவு வேறொருவருக்கு ஏற்றுக் கொள்வதில்லை. இதே போன்றே ஆத்மாவின் உணவாகிய அறிவுகளும் பலவகைகளாகும். ஒருவருக்கு இஷ்டமானது வேறொருவருக்குப் பிடிக்காது. ஒருவருக்கு விளங்குவது இன்னொருவருக்கு விளங்காது. ஒரு கூட்டத்தில் ஒரு பேச்சைப் பேசினால் ஒவ்வொருவரும் அவரவர்களின் தகுதிக்குத் தக்கபடி விளங்கிக் கொள்வார்கள்.

162. அல்லாஹுத் தஆலாவை நாடிச் செல்பவர்களில் காரியசித்தி அடைந்தவர்கள் மகாமு(அந்தஸ்து)களைப் பற்றி பேசுவார்கள்.

சித்தி அடையாமல் அதற்கு முடுகினவர்கள் எகீனின் மகாமுகளாகிய தவக்குல்–பேணுதல் போன்றவைகளைப் பற்றிப் பேசுவார்கள்.

ஆனால் இவ்விரண்டிற்குமிடையில் வித்தியாசமிருக்கும். அது நுண்ணறிவில்லாதவர்களுக்குப் பிசகி விடும். அதாவது காரியம் சித்தியடையாதவர்கள் பேசும் போது பேச்சில் ஒரு

சந்தோஷமும், உற்சாகமும், காரியத்தோடு முடுகி இருப்பதால் அதை பெரிதாகப் பாவித்தலுமிருக்கும். காரிய சித்தியடைந்தவர்கள் பேசுகையில் சாதாரணமாக மற்ற பேச்சுக்களைப் போலவே பேசுவார்கள்.

163. அல்லாஹுத் தஆலாவின் புறத்திலிருந்து வரும் இரகசிய அறிவுகளையும்–மஃரிபாக்களையும் ஸாலிக்குகள் வெளிப்படையாக எல்லோரிடமும் சொல்லக் கூடாது. (ஆயினும்) தன்னுடைய "ஷெய்கி"டம் வெளிப்படுத்துவதும்–சொல்வதும் குற்றமில்லை. பிறரிடம் வெளியாக்கினால் தன்னுடைய கல்பின் அமல்கள் குறைந்து பூர்த்தியான பிரயோஜனத்தை இழந்து விடுவான். (இன்னும்) தன்னுடைய நாயனாகிய அல்லாஹ்விடம் உண்மையாளானாக விருப்பதையும் தடுக்கின்றது. ஏனென்றால் பிறரிடம் சொல்வதில் தன் நப்ஸின் இச்சைக்கு இணங்குகிறான். அதைப் பேசுகையில் நப்ஸு சந்தோஷப்பட்டு ஒருவிதமான இன்பம் அடைகிறது. ஆகவே நாயனிடம் "உண்மையாளன்" இல்லாமல் ஆகிவிடுகிறான்.

164. ஜனங்கள் ஏதாகிலுமொன்றை உனக்குத் தந்தால் உனக்குத் தருகிறவனும் உனக்குத் தந்தவனுக்குக் கொடுத்தவனும் அல்லாஹுத் தஆலாதான் என்று நீ உன் அறிவாலும்–நிலைமையாலும், அனுபவத்தாலும் அறியாத வரையில் ஜனங்களிடமிருந்து வாங்க உனது கையை நீட்டாதே! அவ்விதம் அனுபவத்தால் தெரிந்த பிறகு வாங்குவதாய் இருந்தாலும் கூட, மார்க்கத்தின் படி ஆகுமானதை தேவைக்கு மட்டும் நல்லவர்களிடமிருந்து வாங்கு! கொடுத்ததைச்

சொல்லிக் காட்டுகிறவர்களிடமிருந்தும், பெருமை காட்டுகிறவர்களிடமிருந்தும் இது போன்றவர்களிடமிருந்தும் வாங்க வேண்டாம்.

165. ஆரிபீன்கள் தங்களின் ஹாஜத்துக்களை அல்லாஹுத் தஆலாவிடம் கேட்பதற்கும் கூட சில வேளை வெட்கப்படுவார்கள். அவனின் நாட்டப்படி தந்தாலும் சரி! தராவிட்டாலும் சரி! கஷ்டப்படுத்தினாலும், உதவி செய்தாலும் சரி என்றிருப்பார்கள். அப்படி இருக்க கல்குகளிடம் ஒன்றைக் கேட்க எப்படி வெட்கப்படாமலிருப்பார்கள்? எல்லா கல்குகளும் எப்பொழுதும் அல்லாஹுத் தஆலாவிடம் ஹாஜத்தானவர்களாயும் – ஏழைகளாயுமிருக்கிறார்கள். அல்லாஹுத் தஆலாதான் தேவையற்ற சீமான். ஆகையால் கல்குகளிடம் கேட்டு உங்களின் ஈமான்களை அழுக்காக்கி விடாதீர்கள். அவன் மீதல்லாது நம்பிக்கை வைக்காதீர்கள்.

166. இரண்டு வகையான இபாதத்துகளில் எதைச் செய்வது ஏற்றம் என்று உனக்குப் பிசகிக் கொண்டால் உன்னுடைய நப்ஸுக்குக் கனமாகவும் கஷ்டமாகவும் தோன்றுகிறதை செய்ய வைத்து நப்ஸை அடக்கு!

ஏனென்றால் நப்ஸு எப்பொழுதும் தன்னுடைய ஆசைகளை நிறைவேற்றுவதிலும், மூரியாட்டம் செய்வதிலும் கவனமாக இருக்கும். கனமான வேலைகளைச் செய்ய வைத்து அடக்கினால் இலேசாகவே நல்ல வேலைகளைச் செய்ய ஆரம்பிக்கின்றது. இவ்விதமாக கனமான வேலைகளைச் செய்ய வைக்க வேன்டுமென்றது அடங்காத நப்ஸுக்குத்தான். ஆனால்

அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்தில் அடங்கிய நப்ஸுக்குப் பிரயோஜனம் ஜாஸ்தியான இபாதத்துகளைச் செய்விக்க வேண்டும். அதை எப்படித் தெரிந்து கொள்வதென்றால், சமீபத்தில் உனக்கு மௌத்து வருவதாயிருந்தால் நீ எந்த வேலைகளைச் செய்ய முயற்சிப்பாயோ அந்த வேலைகளே ஏற்றமானவைகளாகும். அதைச் செய்து கொள்! ஏனென்றால் மௌத்து வரக்கூடிய நேரத்தில் தன்னுடைய ஆசைக்கு வழிப்படுதலோ, முகஸ்துதியான வேலைகளோ செய்ய மாட்டார்கள். (வருஷை) மகிமை ஜாஸ்தியான இபாதத்துகளையே செய்ய முயற்சிப்பார்கள். ஆகவே எந்த நேரமும் அவ்விதமான வேலைகளில் ஈடுபட முயற்சிக்கவும்.

167. பர்லான இபாதத்துகளில் சோம்பேரித்தனமாக இருந்து கொண்டு, நபிலான வணக்கங்களைச் செய்வதில் துரிதப்படுவது ஹவாவு(ஆசை)க்கு வழிபடுகிறதின் அடையாளமாயிருக்கும். ஏனென்றால் பர்லான வணக்கங்களை எல்லோரும் செய்வார்கள். அதைச் செய்வதில் மேன்மை கிடையாது; நபிலான வணக்கங்களைச் செய்தால் எல்லோரைப் பார்க்கினும் மேன்மையும் கீர்த்தியுமேற்படும் என நினைப்பதால் நப்ஸுக்கு பர்லான வணக்கம் கனமாகவும், நப்லான வணக்கம் இலேசாகவும் தெரிகிறது. ஆகையால் பர்லுகளை விட்டு விட்டு நப்லுகளைச் செய்ய ஆசைப்படுகிறார்கள் (எனவே) அது ஆசைக்கு வழிப்படுவதாகும்.

168. பர்லான வணக்கங்களுக்கு நேரங்களைக் குறிப்பிட்டு இருப்பது ஏனென்றால், அவ்விதம் குறிப்பிடாவிட்டால் பிறகு

செய்வோம்; இந்த வேலை முடிந்ததும் செய்வோம் என்று எண்ணி எண்ணிக் கடைசியாய் அதை விட வேண்டிய நிலை வந்து விடும். ஆகையால் நேரங்களை நிர்ணயித்து மட்டுப்படுத்தப் பட்டது.

அவ்விதம் நிர்ணயிக்கபட்ட நேரம் விஸ்தீரணமாயிருப்பது ஏனென்றால் உனக்கு இஷ்டமான நேரத்தில் பூர்த்தியான முறையில் செய்து கொள் என்பதற்காகவும், மன எண்ணங்களை ஒழித்துக் கொண்டு இபாதத்தில் முன்னோக்கவும் கொஞ்சம் பிந்தி விட்டாலும், "கலா" வாயிடாமல் இருக்கவுமேயாம்.

169. அடியார்கள் இபாதத்துகளைக் கொண்டு தன் அளவில் முன்னோக்குவதில் "உணர்வில்லாதவர்கள்" என்று அல்லாஹுத் தஆலா அறிந்திருப்பதால் தனக்கு வழிப்படுவதை தன் அடியார்கள் மீது கடமையாக்கி "வாஜிபுகள்" என்ற சங்கிலிப் பிணைப்பால் அவர்களைத் தன்னளவில் இழுத்துக் கொண்டான்.

மூரியாட்டம் செய்யும் மிருகங்களை கழுத்தில் கயிற்றைக் கட்டி தான் நாடிய இடங்களுக்கு (மனிதன்) இழுத்துச் செல்வது போன்று- "வாஜிபுகள்" எனும் சங்கிலிகளைக் கொண்டு (அல்லாஹ் மனிதனை) இழுத்துக் கொள்கிறான்.

சொர்க்கத்தளவில் சங்கிலிகளால் இழுக்கப்படும் ஜனங்களைப்பற்றி அல்லாஹுத் தஆலா ஆச்சரியப்படுகிறான் என சொல்லப்படுகிறது. சிறை பிடிக்கப்பட்ட காபிர்களிடம் இஸ்லாத்தில் சேருங்கள் என்று வம்பு செய்வது போன்று; அது உண்மையில் சொர்க்கத்தளவில் வம்பாக இழுப்பதாகும். ஆகவே

அல்லாஹுத் தஆலாவிற்காக "கித்மத்து" எனும் இபாதத்துகளை மனிதன் மீது கடமையாக்கியதன் உண்மைக் கருத்து (அடியானை) தன் சொர்க்கத்தில் நுழைய வைப்பதைத் தவிர வேறில்லை. ஏனென்றால் இபாதத்தினாலோ - இபாதத்து செய்பவனினாலோ அல்லாஹுத் தஆலாவுக்கு எவ்வித பிரயோஜனமுமில்லை. ஆகவே இபாதத்தை உன் பேரில் கடமையாக்கியது உன்னை சொர்க்கத்தில் நுழைய வைப்பதற்கேயாகும்.

170. நப்ஸின் ஆசாபாசங்களிலும் மதிமயக்கத்திலும் மூழ்கிக் கிடக்கின்ற ஒருவன் தன்னை அல்லாஹுத் தஆலா இந்தக் கெடுதியிலிருந்து காப்பாற்ற மாட்டான் என நினைத்து அதிலே மூழ்கிக் கொண்டால், அல்லாஹுத் தஆலாவின் தத்துவத்தில் "இயலாமைத்"த் தனத்தை கற்பித்து விட்டான்.

ஆனால் "அல்லாஹுத் தஆலா எல்லா வஸ்துவின் மீதும் திராணி பெற்றவன்" என்பதாகக் குர்ஆனிலே கூறுகிறான். (எனவே) இவனை ஈடேற்றமாக்குவதும் அந்த திராணிக் குட்பட்டதுதானாகையால் அவ்விதம் (இயலாமையை) எண்ணாமல், மன சஞ்சலத்துடனும் கைசேதத்துடனும் அல்லாஹுத் தஆலாவின் வாசலைப் பற்றிப் பிடித்துக் கொள்ளவும். எல்லாவற்றையும் அவன் இலேசாக்கித் தரக்கூடும்.

171. அல்லாஹுத் தஆலா உனக்குச் செய்த உபகாரங்களை உனக்குத் தெரியப்படுத்துவதற்காக சிலவேளை உன்பேரில் அநியாயம் என்ற மதிமயக்கமும்-பாவங்களும் வரும்.

அப்போது இதை கவனித்து முந்திய நிலைமையளவில் மீண்டு கொண்டால் இப்போது ஏற்பட்ட மதிமயக்கமும்-பாவங்களும் கஷ்டமும் உனக்கு நன்மையாக முடியும்.

அல்லாஹுத் தஆலா செய்த நிஃமத்துகளின் நன்மைகளை உணர்ந்து நன்றி செய்யா விட்டால் அந்த நிஃமத்துகளை உன்னை விட்டும் போக்கி கஷ்டப் படுத்தி அவன் நன்மைகளை உனக்குத் தெரியப் படுத்துவான். ஏனெனில் சில வஸ்துக்களை அதன் மாற்றுகளைக் கொண்டுதான் தெரிந்து கொள்ள முடியும். "கண்ணின் உதவி கண் போன பின்பு தெரிந்து கொள்ள முடிகிறது." "தண்ணீரின் பிரயோஜனத்தை தண்ணீரில்லா காட்டில் அகப்பட்டுத் தவிக்கும் போது தெரிகிறான்." இது போன்று அவனின் உபகாரங்களைத் தெரிந்து நன்றி செய்யாவிடில் (இறைவன்) அதைப் போக்கியே தெரியப்படுத்துவான்.

172. அல்லாஹுத் தஆலாவின் நிஃமத்துகள் நேமமாக உனக்கு உண்டாகிக் கொண்டிருக்கும் போது அதற்குத் தகுந்தாற்போல்(நான்) நன்றி செய்ய இயலாதே(!) என நீ பயப்படாதே! அவ்விதம் பயப்படுவது உனது அந்தஸ்தைக் குறைத்து விடும். உன்னில் ஏற்படும் குறைந்த அமல்களுக்கு அதிகமான நன்மைகளை அல்லாஹுத் தஆலா உனக்கு தந்து உனது அந்தஸ்தை உயர்த்துகிறான்; அதாவது "ஒரு நன்மைக்கு அது போன்ற பத்து மடங்கு கூலியை அல்லாஹுத் தஆலா தருவான்" என்று அவனே கூறுகிறான். ஆகையால் பயந்து தகுதியைக் குறைக்காமல் "எல்லா நிஃமத்துகளும் அல்லாஹுத்

தஆலாவில் நின்றுமுள்ளது" என்று சொல்லி நன்றி பாராட்டவும்; அது போதுமான "ஷுக்ரா"கி விடும்.

173. மன இச்சைகளின் துன்பங்கள் கல்பில் தரிபாடாய் விடுவது பெரிய வியாதியாய் இருக்கும். அதற்கு வைத்தியம் செய்வதில் வைத்தியர்களும் இயலாதவர்களாகி விடுவார்கள்.

அதாவது இச்சைகள் இரண்டு வகை. ஒன்று நப்ஸின் இச்சை. இந்த இச்சையானது நல்ல சாப்பாடு, குடிப்புகள், நல்ல உடைகள், நல்ல வாகனங்கள், நல்ல வீடு இது போன்றவைகளைப் பிரியப்படுகிறது. இது உடம்பைச் சார்ந்தது.

இரண்டாவது மன இச்சை. இது பேர், பெருமை, கீர்த்தி மதிப்பு, தலைமைத்தனம் யாவையும் ஆசிக்கின்றது. இது மறைவானவைகளாய் இருப்பதால் இதற்கு வைத்தியம் செய்வது கடினமாயிருக்கிறது. ஆகையினால் இந்த ஆசைகளை கடும் பயமோ அல்லது அல்லாஹுத் தஆலாவின் மீது உள்ள பிரியமோ அன்றி (மற்றெதுவும்) மனதை விட்டு நீக்கா.

174. நப்ஸின் இச்சைகள் கலந்த அமல்களை அல்லாஹுத் தஆலா பிரியப்படவும் ஒப்புக் கொள்ளவும் செய்யாதது போன்று "வேறுபாடு" கலந்த இதயத்தை அல்லாஹுத் தஆலா பிரியப்படவும் அதனளவில் முக நோக்கவும் செய்யான்.

அல்லாஹுத் தஆலா அல்லாததை பிரியப்படும் கல்பு, "ஆசை" எனும் அசுத்தத்தால் அசுத்தமானதாகையால் அது அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்திற்கு (செல்ல) தகுதியற்றதாயிருக்கிறது. "என் வீட்டை சுத்தப்படுத்து" என

*அவனே கூறுகிறானாகையால் சுத்தமில்லா கல்பை அவன் பிரியம் வைக்க மாட்டான்.*

175. *அல்லாஹுத் தஆலாவின் இரகசியம் என்ற பிரகாசம், சில வேளை கல்பின் வெளிப்படையோடு நின்று விடும். அப்போது அந்த கல்பாகிறது அல்லாஹுத் தஆலாவை சில வேளை நினைக்கும். சில வேளை தன் நப்ஸை நோக்கும். சில வேளை "ஆகிரத்"தை நோக்கும். சிலவேளை "துன்யா"வை நோக்கும்.*

*அந்தப் பிரகாசம், சில வேளை கல்பின் உள்புக அனுமதிக்கப் படும். அப்போது அந்த கல்பாகிறது அல்லாஹுத் தஆலாவைத் தவிர வேறொன்றையும் நோக்காது. மற்றவைகளை ஆசிக்கவும் பிரியப்படவும் செய்யாது. இதைப் பற்றித்தான் சில "ஆரிபுகள்", "ஈமான் கல்பின் வெளியிலிருந்தால் அம் மனிதன் துன்யாவையும் ஆகிரத்தையும் பிரியப்படுவான். சில வேளை அல்லாஹ்வுடனும், சில வேளை தன் நப்ஸுடனும் இருப்பான். அந்த ஈமான் கல்பின் உள்ளில் நுழைந்தால் அம் மனிதன் துன்யாவையும் தன் இச்சைகளையும் வெறுத்து விடுவான்" என்றார்கள்.*

176. *சில வேளை உன்னை நோக்கி அல்லாஹுத் தஆலாவின் அறிவுகளாகிய பிரகாசங்கள் வரும். அப்போது கல்புகள் உலக ஆசாபாசங்களால் நிறையப் பெற்றிருந்தால் அப் பிரகாசம் இருந்த இடத்திற்கே திரும்பி விடும். ஏனெனில் அப்பிரகாசம் மிகத் தூய்மையானதாகும். அது அசுத்தமான கல்பில் தங்காது; ஆகையால் வேறுபாடு எனும் அசுத்தத்தை*

விட்டு கல்பை துப்புறவாக்கு! (அவ்வாறு நீ செய்தால்) மஃரிபாக்களாலும் அஸ்றாருகளாலும் உன் கல்பை அல்லாஹுத் தஆலா நிரப்பி விடுவான்.

177. அல்லாஹுத் தஆலாவில் நின்றுமுள்ள மஃரிபாக்களும் இல்முகளும், வருவதற்கு தாமதமாகிறதே என்று நினைக்காதே! அதை ஏற்றுக் கொள்ளும் தகுதியை நீ உண்டு பண்ணிக் கொள்வதில் தாமதமாயிருக்கிறதென்பதை கவனித்து வேறுபாட்டை விட்டு கல்பை அகற்றிக் கொள்வதில் முயற்சி செய்வதுடன் உன்னை அதில் பழக்கு! ஏனெனில் "முயற்சி செய்கிறவனுக்கு நமது வழியை நாமே காண்பிப்போம்" என அல்லாஹுத் தஆலா திருகுர்ஆனில் கூறுகிறான். (எனவே) அவன் வழியில் (நாம்) முயற்சிக் குறைவாய் இருப்பதால் அவனின் நன்கொடையும் பிந்துகிறது (என்பதை அறிந்து கொள்!)

178. ஒவ்வொரு நேரங்களில் செய்ய வேண்டிய வெளிப்படையான தொழுகை, நோன்பு போன்ற இபாதத்துகள் தவறிப் போனால் வேறொரு நேரத்தில் அதை "கலா"ச் செய்ய முடியும். ஆனால் ஒவ்வொரு நேரங்களின் ஹக்குகள் தவறினால் "கலா" செய்ய முடியாது. அதாவது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நேரங்களில் அல்லாஹுத் தஆலாவின் புறத்திலிருந்து ஒவ்வொரு நிலைமை ஏற்பட்டுக் கொண்டிருக்கும். அந்நிலைமையில் செய்ய வேண்டியவற்றைத் தவற விட்டால் வேறொரு நேரத்தில் "கலா"ச் செய்ய முடியாது. அந் நிலைமைகள் நான்கு வகை.

ஒன்று "நிஃமத்து", இரண்டாவது "பலாய் முஸீபத்து", மூன்றாவது "தாஅத்து" எனும் வழிப்பாடு, நான்காவது பாவம். இந்த நான்கு நிலைமைகளிலும் செய்ய வேண்டியவைகள்: நிஃமத்திற்கு அல்லாஹுத் தஆலாவை புகழ்தலும் அவனுக்கு நன்றி செய்தலும் வேண்டும். பலாய் முஸீபத்துகளுக்கு பொறுமையும் பொருந்திக் கொள்ளுதலும் வேண்டும். வழிப்பாட்டு நேரத்தில் இந்த நிஃமத்து அல்லாஹுத் தஆலாவின் புறத்தில் நின்றும் ஏற்பட்ட உதவி என்று தெரிந்து கொள்ள வேண்டும். பாவம் ஏற்பட்ட நேரத்தில் தெளபாவும், பிழை பொறுக்குதலையும் தேட வேண்டும்.

இவைகள் தவறினால் "கலா" ஈடு செய்ய முடியாது. ஆகையால் ஒழுங்கு தவறாது அதபாக இருக்க வேண்டும். ஏனென்றால் ஒவ்வொரு நேரத்திலும் உன்பேரில் அல்லாஹுத் தஆலாவின் ஹக்குகள் கட்டாயம் இருந்து கொண்டே இருக்கிறது. அந்த ஹக்குகளை அந்தந்த நேரங்களில் அவனுக்கு நிறைவேற்றாவிட்டால் மற்றவர்களின் ஹக்குகளை எப்படி நிறைவேற்றுவாய்! ஆகையால் நேரங்களை வீணாகக் கழிக்காதே! அவ்வாறு வீணாக நேரங்களைப் போக்குவாயாகில் அல்லாஹுத் தஆலாவின் ஹக்குகள் தவறி விடும்.

179. உனது வயதுகளில் கொஞ்சமாகிலும் வீணாகி விட்டால் அதற்கு பதில் கிடையாது.(எனவே) அந்த வயதுகளை வீணாக்காமல் நல் அமல்கள் செய்தால் அதற்கு விலை மதிக்க முடியாது. இதனால் தான் பெரியோர்கள் ஒவ்வொரு

மூச்சையும் வீணில் கழிக்காமல் பேணி வந்தார்கள்; வீணில் கழித்தவர்கள் மறுமையில் கைசேதப்படுவார்கள்.

180. நீ எந்த வஸ்துவை ஆசிக்கின்றாயோ அவ்வஸ்துவிற்கு அடிமையாகத் தான் இருப்பாய்! நீ மற்றொரு வஸ்துவிற்கு அடிமையாய் இருப்பதை அல்லாஹுத் தஆலா இஷ்டப்பட மாட்டான். ஏனென்றால் நீ ஒரு வஸ்துவை ஆசிக்கும் போது அவ்வஸ்துவோடு அதிகமாக சம்பந்தப்படவும், அதற்குத் தலை சாய்க்கவும் ஏற்படும். அப்போது அல்லாஹுத் தஆலாவை விட்டு தூரப்படுகிறாய்! அதை அவன் இஷ்டப்பட மாட்டான்.

181. உன்னுடைய வழிப்பாடு அல்லாஹுத் தஆலாவுக்கு எவ்வித பிரயோஜனத்தையும் கொடுக்காது; உனது பாவம் அவனுக்கு ஒரு கஷ்டத்தையும் நஷ்டத்தையும் கொடுக்காது! நன்மைகளைச் செய்யும் படி உனக்கு ஏவப்பட்டதும், பாவங்களை விலக்கியதும் உன்னுடைய ஈருலக நன்மைகளுக்காகவே அல்லாது வேறில்லை. அதுவும் உன் மீதுள்ள அல்லாஹுத் தஆலாவின் உபகாரமாகும்.

182. ஒருவர் அல்லாஹுத் தஆலாவை முன்னோக்குவதால் அல்லாஹுத் தஆலாவுக்கு மதிப்பு அதிகமாவதும் அவனை விட்டு புறக்கணிப்பதால் மதிப்புக் குறைவதுமில்லை. அவனின் தன்மைகள் எல்லாம் பூர்த்தியானதாகும். அதிகம், குறைவு எனும் வித்தியாசம் அவனிலில்லை.

183. அல்லாஹுத் தஆலா அளவில் "சேருதல்" என்று ஆரிபீன்கள் சொல்வது, அவனைப் பற்றி உண்மையான

அறிவாக அறிந்து கொள்ளுதல் என்பதாகும். இன்றேல் அவன் ஒன்றோடு சேர்வதை விட்டும் அல்லது அவனோடு ஒன்று சேர்வதை விட்டும் அவன் துாயவனாயிருக்கிறான்.

184. அல்லாஹுத் தஆலாவுடன் நீ "முடுகுதல்" என்பது, வெளிப்படையான முடுகுதல் என்பதல்ல! அவனை விட்டு நீ பிரிந்தவனல்ல! என்பதை நீ தரிசிப்பதாய் இருக்கும். அப்படி இன்றேல் அவனுடைய முடுகுதல் உண்டாக நீ எங்கிருந்தாய். ஆகையால் அவனுடன் அதபாகவும் நல்ல "முறாக்கபா"வுடனும் இருந்து கொள்.

185. ஆரிபீன்களின் கல்புகளில் அல்லாஹுத் தஆலா "தஜல்லி"யாகும் போது, "ஹக்காயிகுகள்" (அல்லாஹ்வின் புறத்திலுள்ள அறிவுகள்) மூடலான நிலைமையில் உண்டாகும். அவ்வறிவின் கருத்துக்களை நன்கு புரிந்து கொள்ள மாட்டார்கள். அதை மனனம் செய்து கொண்டால் அந்த தஜல்லி மாறிய பின் அதன் கருத்துக்கள் வெளியாகும். எது போலென்றால் ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் சொன்னார்கள். "என் ஜுப்பாவில் அல்லாஹ் அல்லாமல் இல்லை" என்றார்கள். இது தஜல்லி கடினமாக இருந்த போது சொன்னதாகும். அது விலகிய பின் யோசித்து கருத்தைப் புரிந்தார்கள். அதாவது அல்லாஹுத் தஆலாவைக் கொண்டல்லாமல் எந்த வஸ்துக்களும் நிலைத்திருப்பதில்லை என்ற கருத்தாகும். இதைப் பற்றியே நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்து அல்லாஹுத் தஆலா, "நீவிர் ஜிப்ரீல் ஓதுவதைக் கவனித்துக்

கேள்! பின்பு அதன் கருத்தை உமக்கு நான் விவரிக்கிறேன்" என்றதும் மேற்கூறிய கருத்தாகும்.

186. அரசர்கள் யுத்தம் செய்து ஒருவர் மற்றொருவரின் நாட்டைக் கைப்பற்றினால் முந்தியவரின் அதிகாரத்தை அழித்து தன் அதிகாரத்தை நடக்கச் செய்வது போன்று "அல்லாஹுத் தஆலாவின் "தஜல்லியாத்" எனும் ஞான அறிவுகள் உனக்கு உண்டாகும் போது, உனக்கு இடையூறாக இருந்த நப்ஸின் குணங்கள் அழிக்கப்படும்."

ஞான உதயங்கள் அடக்கி ஆளும் அல்லாஹுத் தஆலாவின் சந்நிதானத்திலிருந்து வருவதால் அதை எந்த மனிதப் பண்புகள் எதிர்த்து மோதிக் கொண்டாலும் அவைகளை அடக்கி (ஞான உதயங்கள்) ஜயித்துக் கொள்ளும். "பாத்திலின்" மீது "ஹக்கை" நாம் போடுவோம். அப்போது பாத்திலை(பொய்யை), ஹக்(மெய்) அடக்கி ஒழித்து விடும் என்று (இதனையே) அல்லாஹுத் தஆலா கூறுகிறான்.

187. ஒரு வஸ்துவைக் கொண்டு அல்லாஹுத் தஆலா எப்படி மறைந்து கொள்வான்? அவ்வஸ்துவிலும் அவனேதான் வெளியாகி "உள்ளமைப்" பொருளாகி இருக்கிறான். ஆகவே அவன் மறைந்தவனல்ல! இக்கருத்தைப் பற்றி இதற்கு முன் பல முறையில் சொல்லப்பட்டிருக்கிறது.

188. அல்லாஹுத் தஆலாவை நினைவு இல்லாமல் மறந்து நீ செய்த அமல்களை அவன் ஒப்புக் கொள்ள மாட்டான் என்று நீ ஆதரவற்று விடாதே! ஒப்புக் கொண்டதன் அடையாளங்களையும், பிரயோஜனங்களையும் இவ்வுலகில் நீ

பெற்றுக் கொள்ளாதிருந்தாலும் கூட அவ்விதமான அமல்களை சில வேளை அவன் ஒப்புக்கொள்வான். ஆகையால் நீ ஆதரவு முறிய வேண்டாம்.

189. உனக்கு சில ஞான உதிப்புகள் உண்டானது; அவைகளால் அல்லாஹுத் தஆலா அளவில் முன்னோக்குதல்–கெட்ட குணங்கள் மாறி நல்ல குணங்கள் வருதல்–போன்ற பிரயோஜனங்கள் உன் கல்பில் ஏற்படாவிட்டால் அந்த (ஞான) உதிப்புகளைக் கொண்டு நீ சந்தோஷப்பட வேண்டாம்! இது உன்னை மிரட்டக்கூடியதாய் இருக்கக் கூடும் "மேகத்தால் மழை பெய்வது மட்டும் நமக்கு நோக்கமில்லை. பிரயோஜனத்தைத் தரும் மழைதான் நமக்கு வேண்டியது" (இதுவே நமது நோக்கமுமாகும்). இதே போன்றுதான் ஞான உதயங்களும். அதனால் நப்ஸின் இச்சைகளோடு சிலர் நின்று விடுவார்கள். அவ்விதம் நின்று விடுவது பிரயோஜனமற்றதாகி விடும்.

190. உனக்கு ஞான உதயங்கள் உண்டாகி அதன் பிரகாசங்களும் இரகசியங்களும் உன்னில் ஸ்திரப்பட்டு விட்டால், அந்த உதிப்புகள் நேமமாக இருக்க வேண்டுமென்று நினைக்காதே! அது நின்று போனால் கவலைப் படவும் வேண்டாம்! (ஏனெனில்) அப்போது தான் எல்லா வஸ்துக்களை விட்டும் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டே உனக்கு தேவையறுதல் உண்டாகி இருக்கிறது; அவனை விட்டு வேறெந்த வஸ்துக்களைக் கொண்டும் தேவையறுதல் இல்லையென்றும் ஆகிறது.

191. அவனல்லாத ஒன்று உனக்கு எப்போதும் நிலைத்திருக்க வேண்டும் என்று நீ நினைப்பது அவனை நீ பெற்றுக் கொள்ளவில்லை என்பதற்கு அடையாளமாகும். மேலும் அவனைத் தவிர உள்ளவைகள் உன்னை விட்டு இழந்து போவதால் நீ வியப்படைவது அவனோடு நீ சேரவில்லை என்பதற்கும் அறிகுறியாகும்.

அவனோடு ஒருவன் சேர்ந்து விட்டால் மற்றுள்ள எல்லா வஸ்துக்களையும் மறந்து விடுவான். மேலும் அவைகள் இல்லாமற் போவதால் வெறுப்போ வருத்தமோ அடைய மாட்டான்.

192. "நிஃமத்துகள்" அடங்கலும்–அது இவ்வுலகைச் சார்ந்த நல்ல உடை, சாப்பாடு போன்றவைகளாயினும் சரி!–அல்லது மறு உலகைச் சேர்ந்த தோட்டம், மாளிகை போன்றவைகளாயினும் சரி இவைகள் நிஃமத்தாக இருப்பது என்பது அவைகளுடன் அல்லாஹுத் தஆலாவின் தரிசனையும் சேர்ந்ததால் தான்.

"அதாப்" என்ற நோவினை அடங்கலும்–அது எவ்வுலகைச் சார்ந்தவைகளாயிருப்பினும் சரியே! அல்லாஹுத் தஆலாவை தரிசிக்காமல் (நம் பார்வை) அவனை விட்டு மறைக்கப்பட்டிருப்பது தான் (அதாபாகும்).

வெளிப்படையில் (தோற்றத்தில்) அதாபாகத் தெரிந்த போதிலும், அதில் அல்லாஹுத் தஆலாவைத் தரிசித்தால் உண்மையில் அது நிஃமத்தாகத்தான் இருக்கும். ஆகவே அதாபுகளுக்குக் காரணம் அல்லாஹுத் தஆலாவை விட்டு

மறைக்கப்பட்டிருப்பதும், நிஃமத்துகளுக்குக் காரணம் அவனை தரிசிப்பதுமாயிருக்கும்.

193. "துன்யா"க் கவலை துக்கம் அடங்கலும் அகக் கண்ணால் அல்லாஹுத் தஆலாவை தரிசிக்காததினாலேயேதான். எதிலும் எப்பொழுதும் அல்லாஹுத் த ஆலாவை தரிசித்தால் "துன்யா" விஷயங்கள் தவறியதைப் பற்றி கவலையோ துக்கமோ பட மாட்டான்; அல்லாஹுத் தஆலாவை தரிசிப்பவன் எப்போதும் சந்தோஷமுள்ளவனாக இருப்பான். "கவலைப் படாதே! அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்" என அவனே கூறுகிறான்.

194. அல்லாஹுத் தஆலா உனக்கு போதுமான அளவு இரணத்தை தந்து அழிச்சாட்டியம் செய்யுமளவு தராமல் தடுத்துக் கொள்வது, உனக்கு அவன் செய்த பூர்த்தியான நிஃமத்தாயிருக்கும். அதாவது உனது உடல்நிலை பாடாகுமளவிற்கு உண்டி, உடை, உறைவிடமும், ஆன்மா நிலைக்குமளவிற்கு அறிவு, வணக்கம், அனுபோக இன்பமும் தந்து நீ அதனால் அல்லாஹுத் தஆலாவை மறந்து அவனின் நினைவை விட்டு உன்னை வேறு பராக்குக்குள்ளாக்கும் அளவிற்கு வேலைகளைத் தராது, அவன் உன்னை தடுத்துக் கொள்வது அவனின் பெரிய நிஃமத்தேயாகும்.

195. எந்த வஸ்துவைக் கொண்டு நீ சந்தோஷம் அடைகிறாயோ அவ்வஸ்து குறைவாகவிருந்தால் அதன் பேரில் கவலையும் குறைவாகும்; சந்தோஷம் அடையும் பொருள் அதிகமாகவிருந்தால் அதன் பேரில் கவலையும் அதிகமாகும்.

அதாவது, அல்லாஹுத் தஆலா போதிய அளவிற்கு (உனக்கு) துன்யாவையும் கீர்த்தியையும் தந்து அதை நீ பொருந்தி (மேலும்) அதிகத்தை ஆசிக்காமல் இருந்தால், நீ நல்ல புத்திசாலியாவாய். ஏனென்றால் கவலைக்குக் காரணமாகும் அளவை நீ நாடவில்லை.

196. உனக்கு அல்லாஹுத் தஆலாவிடம் நேமமான அந்தஸ்தும் மதிப்பும் வேண்டுமென்று (நீ) நினைத்தால் மனிதர்களிடம் அதிகாரியாகவும் மதிப்பாளனாகவும் இருக்க நாடாதே! (ஏனெனில்) இந்த மதிப்பும் அதிகாரமும் நேமமாக இருக்காது. (இன்னும்) இவைகள் அழிந்து கடைசியாக கேவலமும் இகழுமேதான் ஏற்படும்.

(எனவே) அழியா மதிப்பு என்பது "அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு சங்கை பெறுவதும் அவனை அறிவதும் அவனைக் கொண்டே மற்றவைகளை விட்டு தேவையற்றிருப்பதுமேயாகும்.

197. அழிந்து போகக் கூடிய துன்யாவின் மதிப்பும் கீர்த்தியும், அதிகாரமும் ஆரம்பத்தில் உன்னை பிரியத்திற்குள்ளாக்கினாலும் இறுதியில் அவைகள் உன்னை வெறுக்கச் செய்து விடும். ஏனெனில் இவைகளின் வெளித்தோற்றம் இனிமை, சந்தோஷமாக இருந்த போதிலும் இறுதியில் அவைகள் நீ மௌத் ஆவது கொண்டோ அல்லது உன்னை விட்டு விலகிப் போவது கொண்டோ நீ அவைகளை இழந்து விட்டால் அது உனக்கு கசப்பாக முடியும். இவைகளின் வெளிப் பகட்டு, சந்தோஷங்கள் உன்னை இவைகளளவில்

அழைத்த போதிலும் இவைகளின் உள்ளமைந்த கஷ்டம், கவலை எனும் உபதேசங்கள் இவைகளை விட்டும் உன்னைத் தடுக்கிறது.

198. "துன்யா"வை நீ வெறுப்பதற்காக அதை அல்லாஹ் துன்பம், துயரம், கஷ்டம், நஷ்டம், சீக்கு, பிணியுடைய வீடாக ஆக்கினான். (இன்னும்) துன்யாவில் நல்ல சுகம்-சந்தோஷம்-பணம்-காசால் நாம் நாடிய காரியங்களை நிறைவேற்றலாம் என்றும் நீ நினைத்ததால் தான் அதை நீ ஆசைப்படுகிறாய். எனவே கஷ்ட நஷ்டங்கள், அழிவு, நீ நினைத்த காரியம் கை கூடாமற் போவது ஏற்பட்டால் உனக்கு வெறுப்பு உண்டாகின்றது.

அது மட்டுமல்ல! தனி உபதேசம் மட்டும் உனக்கு பிரயோஜனம் கொடாது; அந்த உபதேசத்தை நீ ஒப்புக் கொள்ளவும் மாட்டாய் என்றும் அல்லாஹுத் தஆலா அறிந்து கொண்டதால் "துன்யாவை" உன்னை விட்டு இலேசாகப் பிரிக்கும் பலா முஸீபத்துகளை(யும்) உனக்கு ருசிக்க வைத்தான். ஆகவே துன்யாவின் பலா முஸீபத்துகள் வரும்போது (நீ) மௌத்தைப் பிரியப்படுவாய்! இது உனக்கு அல்லாஹுத் தஆலா செய்த ஒரு நிஃமத்தாகும்.

199. "பிரயோஜனமான அறிவு" என்பது அல்லாஹுத் தஆலாவையும், அவனது "அஸ்மாஉ"-"ஸிபாத்துகளையும்", அறிவதும்-அவன் முன்னிலையில் "அதபாக" இருப்பதையும், அவனை வணங்கும் விதங்களையும் அறியும் "இல்மு" தான் பிரயோஜனமான அறிவாகும்.

அதாவது, அந்த அறிவின் சுடர்கள் "கல்பை" விரியச் செய்து அதன் மூடிகளை திறக்கச் செய்து-யூகங்களையும், சந்தேகங்களையும் போக்கும் அறிவாகும்.

(இன்னும் எந்த அறிவு) தன் நப்ஸை தூரமாகவும்-அல்லாஹுத் தஆலாவை சமீபமானவன் என்பதாகவும் அறிவித்து, அமலோடு அவனின் பயபக்தியையும் உண்டாக்குமோ அவ்வறிவே சிறந்த அறிவாகும். ஆகவே அவனை பயப்படச் செய்யும் அறிவு(தான்) உனக்கு உபகாரமானதாகும். அவனை பயப்படச் செய்யாத அறிவு உனக்குக் கேடேயாகும். (மேலும்) இந்த அறிவால் நஷ்டமே அல்லாது நன்மை கிடையாது.

200. மனிதர்கள் உன்னை பிரியப் பட்டு உன்னளவில் முன்னோக்கி வராமலிருப்பது அல்லது உன்னை பழிப்பதற்காக முன்னோக்கி வருவது உனக்கு நோவினையாக இருந்தால் அல்லாஹுத் தஆலா உன்னைப்பற்றி அறிந்திருப்பது போதும் என்று நீ திருப்தி அடைந்து கொள்! ஆனால் நீ உண்மையில் கலப்பறுதலாக அமல் செய்கிறவனாகவும் உனது அமல்களை அல்லாஹுத் தஆலா ஒப்புக் கொள்ளவும் செய்தால் மனிதர்களின் இடையூறு உன்னை என்ன செய்து விடும்?

(அல்லது) அப்படி இல்லாமல் நீ பாவியாக இருந்து அல்லாஹுத் தஆலாவின் கோபத்திற்குரிய ஆளாகவும் இருந்தால் மனிதர்கள் உன்னைப் புகழ்வதிலும் உன்னளவில் முன்னோக்கி வருவதிலும் என்ன பிரயோஜனமிருக்கிறது?

அல்லாஹுத் தஆலா உன்னைப் பற்றி அறிந்திருப்பது போதுமென்று நீ திருப்திப்படாமலிருந்தால், அதனாலேற்படும் முஸீபத்து – மனிதர்கள் கஷ்டத்தைக் கொண்டும் நோவினைகளைக் கொண்டும் முன்னோக்கும் முஸீபத்தை விட கடுமையானதாகும். ஆகையால் மனிதர்கள் முன்னோக்குவதை பிரியப் படவும், அவர்கள் புறக்கணித்தால் கவலைப் படவும் செய்யாதே! அல்லாஹுத் தஆலா உன்னை முன்னோக்குவதில் ஆசையுள்ளவனாகவும், அவன் புறக்கணிப்பதால் கவலையுள்ளவனாகவும் நீ இருக்க வேண்டும்.

201. ஜனங்களிடம் உனக்கு செல்வாக்கில்லாமல் அவர்களால் பழிக்கப்படவும் நோவினை செய்யப் படவும் உன்னை அல்லாஹுத் தஆலா ஆக்கி வைப்பது நீ ஜனங்களிடமே அண்டி நன்மை, தீமைகளுக்கு அவர்களிடமே ஒதுங்காமல் இருப்பதற்காகவும், அல்லாஹுத் தஆலாவை விட்டு உன்னை வேறு எந்த வஸ்துக்களும் பராக்காக்கக் கூடாது என்று அல்லாஹுத் தஆலா நாடி இருப்பதாலுமாகும். அல்லாஹுத் தஆலா தனது அவ்லியாக்களை ஆரம்பத்தில் ஜனங்களின் துன்பத்திற்குள்ளாக்கி அவர்களை விட்டு ஆசை முறியச் செய்து மனதைத் தூய்மை படுத்துவது அவனின் வழமையாகும். அது நன்மையே அன்றி தீமையல்ல.

202. திட்டமாக ஷைத்தான் உன்னைக் கெடுப்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பதால் உனது முன் நெற்றி ரோமத்தை பிடித்திருக்கும் படியான அல்லாஹுத் தஆலாவை நீ ஒரு போதும் மறவாதே. அதாவது "ஒவ்வொரு மனிதனுக்கும்

ஷைத்தான் உண்டு; அவன் தனது தும்பிக்கையை மனிதர்களின் கல்பில் வைத்துக்கொண்டே இருக்கிறான். அல்லாஹுத் தஆலாவின் ஞாபகத்தை விட்டு ஒருவன் மறந்து விட்டால் அவன் அம் மனிதனுக்குக் கெட்ட ஊசாட்டங்களைப் போடுகிறான்; அல்லாஹுத் தஆலாவை நினைத்து விட்டால் விலகிக் கொள்கிறான்" என்று ஹதீஸில் வருகிறது.

"எனது உண்மையான அடியார்கள் மீது உனக்கு அதிகாரமில்லை" என்று ஷைத்தானை நோக்கி அல்லாஹுத் தஆலா கூறுகிறான். ஆகையால் எப்பொழுதும் "அல்லாஹ்" எனும் நினைவோடு இருந்தால் ஷைத்தானின் கெடுதி உனக்கு ஏற்படாது.

203. ஷைத்தானை அல்லாஹுத் தஆலா உனக்கு எதிரியாக ஆக்கியது நீ அல்லாஹுத் தஆலா அளவில் ஒதுங்குவதற்காகவேதான்.

அதாவது: ஷைத்தானுடன் எதிரிட, நான் இயலாத் தன்மையுள்ளவன்; என்று நீ உணரும் போது உதவிக்காக அல்லாஹுத் தஆலாவிடம் துடித்து வருவாய்! மேலும் உனது பொறுப்புகள் யாவையும் அல்லாஹுத் தஆலாவிடமே ஒப்புவித்து, அவனைக் கொண்டே ஒதுங்கி அவனுடன் சேர்ந்து விடுவாய்!

உனது நப்ஸையும் உனக்குக் கெடுதி செய்யத் தூண்டுவது, அல்லாஹுத் தஆலா அளவில் உனது முன்னோக்குதல் நேமமாக இருப்பதற்காகத்தான். ஏனென்றால் உனது நப்ஸு ஆசைக்கு வழிபட இழுக்கும் போது அதை வெல்ல உன்னால்

முயொது; அதே வேளை அந்த நப்ஸை விட்டு விட்டு இருக்கவும் முடியாது. "இது வீட்டுக்குள்ளிருக்கும் கள்ளனைப் போலிருக்கிறது." ஆகவே எப்பொழுதும் அல்லாஹுத் தஆலாவிடம் முன்னோக்கி உதவி செய்யக் கேட்கும் நிலைமை ஏற்படுகிறது. இதனால் தான் நாயகம்(ஸல்), "நப்ஸோடு செய்யும் யுத்தம் பெரிய யுத்தம்" என்று சொன்னார்கள்.

204. ஒருவன் தனக்கு தாழ்மை (பணிவு) உண்டென்று ஸ்திரப்படுத்தினாலும் அல்லது நினைத்தாலும் உண்மையில் அவன் பெருமையுள்ளவன் தான். ஏனெனில் மேன்மையில்லாமல் தாழ்மை உண்டென்று அவன் நினைக்க மாட்டான். எனவே எப்பொழுது தனக்கு மேன்மை உண்டுமென்று ஸ்திரமாகி விட்டதோ, அவன் உண்மையாகவே பெருமையுள்ளவன் தான்.

ஒருவன் ஒரு பணிவான வேலையைச் செய்து விட்டு, நான் இதற்கு மேலான வேலை செய்வதற்குத் தகுதியுள்ளவன் தான்; ஆனாலும் தாழ்மைக்காக இப்படிச் செய்தேன் என்று நினைத்தால் அவனும் (வாஸ்தவத்தில்) தாழ்மையுள்ளவன் அல்ல, உண்மையில் அவன் தாழ்மையுள்ளவனாக இருந்தால் அவ்வேலைக்குத் தான் தகுதியற்றவன் என்றே நினைப்பான். எது போலென்றால்; ஒருவன் ஒரு கூட்டத்தின் கடைசி வரிசையில் உட்கார்ந்து கொண்டு நான் தாழ்மைக்காக இங்கு உட்கார்ந்து கொண்டேன். இல்லாவிட்டால் நான் முதல் வரிசையில் உட்காரத் தகுதியுள்ளவன் என்று நினைப்பது போலவும்; முதல் வரிசையில் ஒருவன் உட்கார்ந்து கொண்டு

நான் இதற்குத் தகுதி இல்லாதவன் எனினும் ஏதோ இப்படி சந்தர்ப்பம் கிடைத்துக் கொண்டது என்றும் நினைப்பது போலவும் ஆகும்.

அல்லாஹுத் தஆலாவின் வலுப்பமும் அவனின் குணங்களென்ற தன்மைகளும் தன்னில் வெளியாகிறது என்று உணர்ந்தாலல்லாது உண்மையான தாழ்மை உண்டாகாது. அவன் குணமல்லாது உன் குணத்தை போக்காது. இவ்விதமான குணத்தை அடைந்ததற்கு அடையாள மென்னவென்றால், யாரும் உன்னை இகழ்ந்தாலும், புகழ்ந்தாலும் எவ்வித வித்தியாசமும் உனக்கு ஏற்படாது. கவனிக்கவும்.

205. உண்மையான "முஃமின்" தன்னில் நின்றும் ஏதாகிலும் நலவான காரியம் உண்டானால் அதற்கு தன்னை பெருமைப்படுத்தாமல் அல்லாஹுத் தஆலாவைப் புகழ்வதில் கவனம் செலுத்துவான். அவனின் ஹக்குகளை நிறைவேற்றுவதிலே கவனமாய் இருப்பான். அவனில் நின்றும் அதற்கப் பகரமாக சொர்க்கத்தை விரும்பவோ-நரகத்தை விட்டு தூரப்படவோ ஆசிக்க மாட்டான். அதாவது அவனுக்காகவே வணங்குவான்.

உண்மை சிநேகிதன்-தன் சிநேகிதனிடம் ஒரு வேலைக்கு பகரத்தையோ ஒரு உபகாரத்தையோ விரும்ப மாட்டான்.

உனக்காக உதவி செய்பவனும் செலவழிப்பவனுமே அல்லாது உன்னிடம் உதவி பெறவும் எதையும் வாங்கவும் நினைப்பவன் உண்மை நண்பன் அல்ல!

206. நப்ஸுக்கு ஆசாபாசம் என்னும் மைதானம் இல்லாவிடில் அல்லாஹுத் தஆலாவிடம் "ஸுலூக்" எனும் பிரயாணம் செய்தலுக்கு அவசியம் ஏற்படாது. அவன் நம்மைவிட நம்முடன் நெருங்கி இருக்கிறான். உனக்கும் அவனுக்குமிடையில் பிரயாணம் செல்ல தொலைதூரம் இல்லை. உனக்கும் அவனுக்குமிடையில் சேர்த்து விடுவதற்காக ஒரு பகைமையோ-வேற்றுமையோ இல்லை.

ஆகவே "ஸுலூக்" என்பது நப்ஸின் ஆசா பாசங்களையும் அதன் இயற்கை குணமாகிய மூரியாட்டத்தையும் அடக்கி ஒடுக்கி துப்புறவு செய்வது தான். அது இல்லாவிட்டால் "ஸுலூக்" என்பதற்குக் கருத்தில்லை.

207. எல்லா சிருஷ்டிகளிலும் நீ மேலானவன் (உயர்) தன்மை வாய்ந்தவன் என்பதை உனக்குத் தெரியப்படுத்துவதற்காக, அல்லாஹுத் தஆலா உன்னை ஆலமுல் முல்கும்-ஆலமுல் மலக்கூத்தும் பொருந்திய நடுத்தரமான ஆலமாகப் படைத்தான். (எனவே) சிருஷ்டிகள் எனும் சிப்பிக்குள் கார்க்கப்பட்ட பரிசுத்தமான முத்தைப் போல் நீ இருக்கிறாய்!

மிருகங்களைப் போல் நீ ஆலமுல் முல்கை மட்டும் சேர்ந்தவனல்ல! மலக்குகளைப் போல் (நீ) மலக்கூத்தை (ஆலமுல் ஃகைபை) மட்டும் சேர்ந்தவனுமல்ல! இரு தன்மைகளும் உன்னில் சுழன்று கிடக்கின்றது. இதனாலேயேதான் (நீ) கிலாபத்திற்கும்-அமானிதத்தை ஏற்றுக் கொள்வதற்கும் தகுதியுள்ளவனாக ஆனாய்! (ஆகவே) உன்னில்

சுழன்று கிடக்கும் தன்மை (முஜாஹதா) முயற்சியாலும் (ரியாலா) மனப்பழக்கத்தாலும் வெளியாகும்.

கீழ் உலகமாகிய இப்பூவுலகம் உனக்கு இடம் கொடுத்தது, உனது உடலைப் பொருத்த மட்டிலும்தான். அதற்கு இவ்வுலகத்தோடு தான் சம்பந்தங்கள். அதன் தேவைகள் இவ்வுலகை விட்டும் அப்புறப்பட்டதல்ல. அது ஆலமுல் முல்கைச் சார்ந்தது.

உனது (ரூஹ்) ஆத்மாவை பொருத்த மட்டில், இவ்வுலகம் இடம் கொடுக்கவில்லை. அது இவ்வுலகைச் சேர்ந்ததுமில்லை. அதற்கு இவ்வுலகோடு சம்பந்தமுமில்லை. அது பரிசுத்தமாகி விட்டால் "ஆலமுல் ஜபரூத்" அளவில் சேர்ந்து விடும். வானமோ பூமியோ அதைத் தடுக்காது. ஆகையால் "திக்ரு" "பிக்ரு" "ரியாலத்"து முதலியவைகளால் அதை சுத்தப்படுத்துவது அவசியமாகும்.

208. "துன்யா" என்னும் இவ்வுலகிலிருக்கும் போது "அல் இல்முல் மஃரிபா" என்னும் மைதானமாகிய மறைவான உலகத்தின் புறம் கல்பின் வாயல்கள் திறக்கப்படாவிட்டால் அதன் ஆசாபாசமெனும் ஊன், குடிப்பு, பருகல் போன்றவைகளில் சிக்குண்டு உடம்பின் வடிவத்திலே தடுக்கப்பட்டு விடும். இவ்வுலகைப் படைத்த அல்லாஹுத் தஆலாவை இவ்வுலகிலேயே நீ தரிசித்துக் கொள்ளாவிட்டால் நீ இவ்வுலகுடனே ஆகி விடுவாய்!

இவ்வுலகில் அவனை தரிசித்துக் கொண்டால் உலகம் உன்னுடனே ஆகிவிடும். நீ இவ்வுலகை விட்டு

தேவையற்றவனாகி விடுவாய். அது உன்னைத் தேடும். உனக்கு அது பணிந்து கொள்ளும். நீ அதற்கு அதிகாரியாகி விடுவாய்! எதை நினைத்தாலும் உண்டாகி விடும்.

209. "மஃரிபத்" "விலாயத்" போன்றவைகள் உள்ரங்கத்(அந்தரங்கத்)தை சார்ந்தவைகள். தீனி, குடிப்பு போன்றவை வெளிரங்கத்தைச் சேர்ந்தவை. இதனாலே தான் அன்பியாக்களும், அவ்லியாக்களும் (வேறுபாடில்லாததால்) மறைந்து கொண்டார்கள். அதாவது அவர்களும் சாதாரண மனிதரைப் போல் தின்னவும்-குடிக்கவும் செய்வார்கள். (இதனால்) வெளிப்படையில் சாதாரண மனிதரைப் போன்றே இருந்தார்கள். ஆதலால் நாம் தெரிந்து கொள்வதில்லை. (ஆனாலும்) "விலாயத்" "மஃரிபத்" போன்ற தன்மைகள் உண்டாவதற்கு தீனி, குடிப்பு, திருமணம் போன்ற மனிதப் பண்புகள் அற்றுப் போவது ஷர்த்தில்லை.

எது போன்றென்றால்; இருள் அடைந்திருந்த வானத்தில் ஒரு ஓரத்தில் சூரியன் பிரகாசிப்பது போன்றாகும். சூரியன் பிரகாசிக்கும் போது இருளாயிருந்த இடங்கள் எல்லாம் பிரசாசித்துக் கொள்ளும். அது மறைந்தவுடன் இருள் திரும்ப வந்து விடும். இதே போல் அல்லாஹுத் தஆலா அவனது அவ்லியாக்களின் கல்புகளை பிரகாசிக்கச் செய்வான். அப்பிரகாசம் அதிகமாகி மனிதப் பண்புகளை மேலிட்டு அவைகளுக்கு குணபாடில்லாமல் ஆக்கி விடுகிறது.

அல்லாஹுத் தஆலாவின் குணம் என்ற சூரியன் உனது குணம் என்ற இருளில் சில வேளை பிரகாசிக்கும். அப்போது

நீ அவனைக் கொண்டு திராணி பெற்றவனும் அறிந்தவனுமாகி விடுவாய்.

சிலவேளை அந்த சூரியப் பிரகாசம் உனது குணமாகிய இருளில் வெளியாகாமல் இருக்கும். அப்போது நீ உனது குணம் என்ற இருளில் திரும்பி விடுவாய்!

ஆகவே பகல் எனும் அவன் குணம், அவனால் உனக்கு வருவதே அல்லாது உன்னால் உனக்கு வருவதில்லை. அவன் நாடினால் அதை ஸ்திரமாக வைத்து விடுவான்; நாடினால் நீக்கி விடுவான். இதனாலேயேதான் சில அவ்லியாக்கள் சில வேளைகளில் பலசாலிகளாகவும், சிலவேளைகளில் பலஹீனர்களாகவும் காணப்படுகிறார்கள்.

210. உலகமெனும் சிருஷ்டிகள் இருப்பதால் அல்லாஹுத் தஆலாவுக்கு (இஸ்முகள்) நாமங்கள் உண்டு என்றும்; நாமங்களால் அவனுக்கு தத்துவம்–நாட்டம்–அறிவு போன்ற குணங்கள் உண்டுமென்றும்; குணங்களால் அவனுக்கு உள்ளமை என்ற தாத்து உண்டுமென்றும்; (அச்சிருஷ்டிகள்) அறிவிக்கின்றன. ஏனென்றால்: இடம் இல்லாமல் குணங்கள் நிலைக்க முடியாது. ஸாலிக்குகள் இவ்விதமாக சிருஷ்டிகளைக் கண்டு நாமங்களைக் கண்டு குணங்களைக் கண்டு அல்லாஹுத் தஆலாவைத் தெரிந்து கொள்வார்கள்.

மஜ்துாப்களுக்கு முதல் தடவையிலேயே அவனின் உள்ளமை எனும் தாத்தின் பரிபூரணத்தை வெளியாக்கப் படும். அதற்குப் பின்னர் அவனின் குணங்களைத் தெரிந்து சிருஷ்டிகளைக் கண்டு கொள்வார்கள்.

ஆகவே "ஸாலிகீன்"களின் கடைசிப்படி "மஜ்தூப்"களின் முதற் படியாகவும்-ஸாலிகீன்களின் முதற்படி மஜ்தூப்களின் கடைசிப் படியாகவும் இருக்கிறது. ஆனாலும் இருவர்களும் ஒரே அந்தஸ்துடையவர்களில்லை.

ஸாலிக்குகள் ரியாலத்-திக்ரு-பிக்ரு போன்றவைகளில் ஈடுபட்டு அனுபவத்துடன் படிப்படியாக மேல் செல்வதால் பிறருக்கும் பிரயோஜனமாகிறது. ஆகையால் இவர்தான் மேலானவர். சிலவேளை இவ்விருவர்களும் இடைப்படிகளில் சந்தித்துக் கொள்வார்கள். அதாவது; ஸாலிக்கு ஏறும் வேளைகளிலும் மஜ்தூபு இறங்கும் வேளைகளிலும் இடையில் சந்திப்பு ஏற்படுகிறது.

211. வானத்தின் வெளிச்சம் இவ்புலகாகிய துன்யா என்னும் ஆலமுல் முல்கில் அல்லாது வெளியாகாது. அதே போன்று கல்பின் பிரகாசங்களின் அளவையும்-அதன் ரகசியங்களின் மதிப்பையும் மறைவான உலகமாகிய ஆலமுல் மலக்கூத்தில் அல்லாது (மற்றெதிலும்) தெரிந்து கொள்ளப்பட மாட்டாது.

212. வழிப்பாட்டின் பிரயோஜனங்களை இவ்வுலகிலேயே பெற்றுக் கொள்வது அவ்வேலை செய்பவர்களுக்கு மறுமையிலும் கூலி உண்டென்பதற்கு ஒரு நன்மாராய அறிவிப்பாகும்; (இன்னும்) அவன் ஒப்புக் கொண்டான் என்ற அறிகுறியுமாகும்.

213. அவன் உனக்கு இனாமாகத் தந்த அமல்களுக்கு எப்படி நீ பதிலைக் கேட்பது? அல்லது அவன் உனக்கு

நன்கொடையாகத் தந்த உண்மை(இக்லாஸு)க்கு எவ்விதம் கூலி கேட்பது? அவ்வாறு (நீ) கூலி கேட்க வேண்டுமானால் உன் வேலையினால் வேறொருவன் பலன் அடைய வேண்டும். அப்போது (தான் நீ) அவனிடம் கூலி கேட்கலாம். (ஆனால்)இது உனது வேலை. அதற்கு நீயேதான் பலன் அடைந்து கொள்கிறாய்! (இன்னும் திண்ணமாக) உன்னை விட்டும், உனது வேலைகளை விட்டும் அல்லாஹுத் தஆலா தேவையற்றவனாயிருக்கிறான். ஆகவே அவனிடம் நீ கூலி கேட்பது நன்றி கேடாகும்; நன்கொடையை மறப்பதுமாகும்.

214. சில ஜனங்கள் அல்லாஹுத் தஆலாவை திக்ரு செய்வதற்கு முன்னதாகவே அவர்களின் கல்புகள் பிரகாசித்து விடும். அப்பொழுது அவர்கள் அல்லாஹுத் தஆலாவை "திக்ரு" செய்பவர்களாகிறார்கள். இவர்கள் அல்லாஹுத் தஆலாவின் கருணையால் அவனளவில் வாஸிலானவர்கள் (சேர்ந்தவர்கள்). இவர்களைப் பற்றித்தான் "அவன் நாடியவர்களை அவன் ரஹ்மத்தைக் கொண்டு சொந்தமாக்கிக் கொள்வான்" என்று அல்லாஹுத் தஆலா திருமறையில் கூறியுள்ளான். (எனவே) இவர்களை வாஸிலீன்கள் என்றும் மஜ்துாபுகள் என்றும் சொல்லப்படும்.

சில ஜனங்களுக்கு அல்லாஹுத் தஆலாவை திக்ரு செய்த பின்னர் கல்பு பிரகாசமாகும். இவர்கள் கல்பு பிரகாசிப்பதற்கு திக்ரு செய்வார்கள். (இவ்வாறு மிகுதமாக திக்ரு, பிக்ரு, ரியாலத்து செய்வதால் அல்லாஹுத் தஆலாவில் இவர்கள் வாஸிலா (சேர்)வார்கள். இவர்களைப் பற்றி அல்லாஹுத்

தஆலா குர்ஆன் ஷரீபில் "நம்மளவில் தெண்டிப்பவர்களுக்கு (நாம்) நமது பாதையளவில் நேர்வழி காட்டுவோம்" என்று கூறியுள்ளான். (எனவே) இவர்களுக்கு "ஸாலிகீன்கள்" என்று சொல்லப்படும்.

ஆகவே உள்ளமையில் அல்லாஹுத் தஆலாவை தரிசிப்பதினாலும் அவனைப் பற்றிய சிந்தனையினாலும் அன்றி வெளிப்படையான திக்ருகள் உண்டாகாது.

215. உன்னுடைய இபாதத்துகளாலும் திக்ரு, பிக்ருகளாலும் அல்லாஹுத் தஆலாவின் வலுப்பங்களை நீ தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவன் உன்னிடம் வேண்டிக் கொள்வதற்கு முன்னதாகவே உனது தகுதிக்குத் தகுந்தபடி உன் கல்பில் அவன் வெளியானான். அப்போது உனது வெளி உறுப்புக்கள் அவன் "இலாஹு" தான் என்பதாக மொழிந்தது; உனது கல்பும் ஸிர்ருகளும் அவன் ஒருவனே என்பதாக உறுதி கொண்டது.

216. மனிதனே! ஸாலிக்கே! உனக்கு அல்லாஹுத் தஆலா மூன்று விதமான சங்கையை செய்திருக்கிறான்.

முதலாவதாக; அவனை வணங்குகிறவனாகவும் திக்ரு செய்கிறவனாகவும் உன்னை ஆக்கினான். அவனின் சங்கை எனும் அவ் வேண்டுகை இல்லாதிருப்பின் அவனை நீ வணங்கவோ திக்ரு செய்யவோ தகுதியுள்ளவனாக மாட்டாய்! ஏனென்றால் உனது இயற்கை சோம்பலும், சோர்வும், குறைவுமேயாகும். அவனின் அனுக்கிரஹம் இல்லாதிருந்தால் (நீ) அவனை நினைத்திருக்க மாட்டாய்!

இரண்டாவதாக; உன்னை அவன் திக்ரு செய்கிறான். நீ திக்ரு செய்யப்படுகிறவனாய் ஆகிறாய். அவன் தனது உயர் வேதமாம் திருகுர்ஆனில் "என்னை திக்ரு செய்யுங்கள். நானும் உங்களை திக்ரு செய்கிறேன்" என்பதாகக் கூறி இருக்கிறான். இதுவும் அவனின் அனுக்கிரஹம் உன் மீது உண்டு என்பதற்கும், உனக்கும் அவனுக்குமிடையில் ஒரு சம்பந்தம் உண்டு என்பதற்கும் அத்தாட்சியாகும்.

மூன்றாவதாக; அல்லாஹுத் தஆலாவின் சன்னிதானத்தில் உன்னை திக்ரு செய்யப்படுகிறது. அதாவது; ஹதீது குத்ஸியில், "என்னை ஒருவன் தனிமையில் திக்ரு செய்தால் நான் அவனை என்னில் (நப்ஸில்) திக்ரு செய்வேன். என்னை அவன் ஒரு கூட்டத்தில் திக்ரு செய்தால் அக் கூட்டத்தைப் பார்க்கிலும் மேலான ஒரு கூட்டத்தில் நான் அவனை திக்ரு செய்வேன்" என்பதாக வருகிறது. இவ்விதம் திக்ரு செய்யப்படும் போது உனக்கு அவனின் நிஃமத்துகள் பரிபூரணமாகி விட்டது. அல்லாஹுத் தஆலாவை "திக்ரு செய்வது மிகப் பெரிது" என அவனே கூறுகிறான்.

217. வயதுகள் அதிகமாயிருந்தும் பிரயோஜனம் குறைந்த எவ்வளவோ மனிதர்கள் இருக்கிறார்கள். இவர்கள் அல்லாஹ்வை மறந்து தன்னுடைய ஆசாபாசங்களுக்கு வழிப்பட்டு நடப்பவர்கள். (எனவே) வெளித் தோற்றத்தில் இவர்களின் வயது நீளமாய் இருந்த போதிலும் உண்மையில் (இவர்கள்) வயது குறைந்தவர்களே!

காலமும் வயதும் குறைவாய் இருந்து அதிகமான பலன் அடைந்து கொண்ட எவ்வளவோ மனிதர்களும் இருக்கிறார்கள். அல்லாஹுத் த ஆலாவை அறிந்து எல்லா விதமான இடையூறுகளையும் விலக்கிக் கொண்டு "அல்லாஹ்வே சதம்" என இருப்பவர்கள். ஒருவன் தன் வயதில் "பரகத்து" கொடுக்கப் பட்டால் சொல்லாலும் சயிக்கனையாலும்– அல்லாஹுத் தஆலாவின் அளவற்ற உபகாரங்கைள குறைந்த காலத்தில் அடைந்து கொள்வான். இதனால் தான் அபுல் அப்பாஸில் மிர்ஸீ (ரஹ்) அவர்கள், "எமது எல்லா நேரங்களும் 'லைலதுல் கத்ரு தான்" என்று சொன்னார்கள். ஆகவே (எல்லம் வல்ல நாயனான) அல்லாஹுத் தஆலா நமக்கும் (இத்தகைய) பரகத்தைத் தருவானாக! ஆமீன்.

218. உனக்கு துன்யா வேலைகளோ மற்றும் கவனங்களோ இல்லாமலும், சீக்கு–பிணி போன்ற அசௌகரியங்களும் இல்லாமலும், ஊண்–உடை–வீடு போன்ற எல்லா வசதிகளும் இருந்தும் அல்லாஹுத் தஆலாவை நாடி அவனளவில் பிரயாணம் செய்யாமல் இருக்கின்ற உனக்கே தான், கேவலம் என்னும் கேவலமும் நஷ்டமும் (என்பதை நீ அறிந்து கொள்.)

219. பிக்ரத்(சிந்தனை) என்பது வேற்றுமை எனும் மைதானில் கல்பு நடப்பதாகும். பொது மக்கள் அல்லாஹுத் தஆலாவின் சிருஷ்டிகளைப் பார்த்து சிந்தித்து இதற்கு ஒரு சிருஷ்டி கர்த்தா உண்டென்று தெரிந்து கொள்வார்கள்.

சிலர்கள் நன்மையான வேலைகளைப் பற்றி சிந்தித்து இதைச் செய்தால் அதிகமான நன்மை கிடைக்குமெனத் தெரிந்து

அவ்வேலைகளை அதிகமாகச் செய்யவும்-பாவங்களைப் பற்றி யோசித்து அதை விட்டு விலகிக் கொள்ளவும் செய்வார்கள். இவர்களே ஆபிதீன்கள் (ஆவர்).

ஜாஹிதீன்கள் (துறவிகள்) இவ்வுலகமும் இவ்வுலக வாழ்க்கையும் நித்தியமானதல்ல; இதன் பிரயோஜனங்களும் நிலைபாடானதல்ல; எனும் சிந்தனையில் மூழ்கி துறவை (ஜுஹ்தை) அதிகமாக்கிக் கொள்கிறார்கள்.

ஆரிபீன்கள் அல்லாஹுத் தஆலாவின் "நிஃமத்"தையும் உபகாரத்தையும் நினைத்து முஹப்பத்தை அதிகமாக்கிக் கொள்வார்கள்.

ஆகவே சிந்தனை என்பது கல்பின் விளக்காய் இருக்கிறது. அவ்விளக்கு அணைந்து விட்டால் கல்பு இருளடைந்து விடும்.

சிந்தனை என்பது இருவகை; ஒன்று ஈமானுத் தஸ்தீக். இது ஸாலிகீன்களின் சிந்தனையாகும். இரண்டாவது; ஷுஹூதுல் இயான் (நேரிடை தரிசினை). இது ஆரிபீன்கள்-மஜ்தூபுகளின் சிந்தனையாகும். ஆகையால் அதற்கு (ஷுஹூதுல் இயானுக்கு) பிக்ரதுத் ததல்லி (இறங்கும் போதுள்ள சிந்தனை) என்றும்; முந்தியதற்கு (ஈமானுத் தஸ்தீக்குக்கு) பிக்ரதுத் தரக்கீ (ஏறும் போதுள்ள சிந்தனை) என்றும் (பெயர்) சொல்லப் படும்.

முதலாம் சிந்தனை வெளிப்படையான சிருஷ்டிகளைக் கொண்டு அல்லாஹ்வைப் பற்றி சிந்திப்பவர்களின் சிந்தனையாகும்.

இரண்டாம் சிந்தனை அகப் பார்வை உடையோர்களுக்குள்ள சிந்தனையாகும்.

அல்லாஹுத் தஆலா நம்மனைவோரையும் அவனைப் பற்றி சிந்திப்பவர்களாக ஆக்குவானாக. ஆமீன்.

## கடிதங்கள்

இனி இந்த மூல நூலாசிரியர் தங்களின் சில சகோதரர்களுக்கு எழுதிய மூன்று கடிதங்களும், ஒரு கேள்விக்கு பதிலும் சில முனாஜாத்துகளும் இருக்கின்றன.

அதில் முதல் கடிதத்தில் ஸாலிக்குகளின் நிலைமைகளைப் பற்றியும் முடிவின் நிலைகளைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

1. "ஹம்து" ஸலவாத்திற்குப் பின் ஆசிரியர் எழுதுகிறார்:-

ஒரு முரீதின் ஆரம்ப நிலைமை (அவரின்) முடிவு நிலைமையின் கண்ணாடியாயிருக்கும். அதாவது "ஒரு ஸாலிக்கானவர் ஆரம்பத்திலேயே தனது ஆசாபாசங்களையும் பெருமை கீர்த்திகளையும் அடக்கி ஒடுக்கி அடிமைத்துவத்தை நிலைப்படுத்துவதற்காக-வேண்டிய நல் அமல்களை செய்தால் அவரின் முடிவு, கல்பு தெளிந்து பிரகாசித்து தனது மஹ்பூபாகிய ஹக்களவில் சேர்ந்து கொள்வார் என்பதை தெரிந்து கொள்ளலாம்.

ஒருவரின் துவக்கம் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டிருந்தால் அவர் முடிவும் அவனளவிலேயே இருக்கும்! நீ எதைக் கொண்டு பராக்காயிருக்கின்றாயோ அதைப்

பிரியப்படவும் அதனளவில் தீவிரப்படவும் செய்வாய்! எதை நீ புறக்கணிக்கின்றாயோ அதை விட்டு விட்டு அல்லாஹுத் தஆலாவின் பிரியத்தை தெரிந்தெடுத்துக் கொள்வாய்.

ஒருவன் அல்லாஹுத் தஆலா தன்னைத் தேடுகிறான் என்று உறுதி கொண்டால் அவனின் தேட்டத்தை உண்மையாக்குவான்! அதாவது; அல்லாஹுத் தஆலா தன் அடிமையிடம் அடிமைத்துவத்தின் ஹக்குகளை நிறைவேற்று என்றும்; என்னல்லாதவைகள் அனைத்தையும் வெறுத்து விட்டு என்னளவிலேயே முன்னோக்கு என்றும் அவன் சொன்னால்– அவ்வடிமை தனது உடல் ஆவி மனம் யாவற்றையும் தன் எஜமானனாகிய அல்லாஹுத் தஆலா அளவில் திருப்பி விட வேண்டும். அவனல்லாத வஸ்துக்கள் மீது நினைப்போ நம்பிக்கையோ இருக்கக் கூடாது.

ஒருவன் தன்னுடைய எல்லா விஷயங்களும் அல்லாஹுத் தஆலாவின் கைவசம்தான் இருக்கிறது என்று உறுதியாகத் தெரிந்தால்–தனது எல்லா விஷயங்களையும் அவன் புறமே சாட்டி விடுவான். அதற்கு வெளிப்படையான உள்ளமையை அந்தரங்கமாக்கிக் கொள்ளுதல் வேண்டும். (இன்னும்) அதற்காக இந்த வெளிப்படையான உள்ளமையை உடைத்தெறிந்து இவ்வுலக அழகையும்–பாசத்தையும் நீக்கி விட வேண்டும். இது ஸாலிக்குகளுக்கு ஏற்படும் கஷ்ட–நஷ்டங்களுக்கு ஆறுதலாகச் சொன்னவைகளாகும். ஏனென்றால் ஸாலிக்குகளுக்கு அவ்விதம் ஏற்படுவது சகஜம் தான். சகஜம் என்ன? கட்டாயம் ஏற்படும்!

அழிந்து போகும் உலகத்தைப் பார்க்கிலும் அழியாத உலகத்தை நேசிப்பவனே புத்திசாலி. அதாவது; உண்மையில் புத்தியுள்ளவன் கலக்கங்கள் கலந்த இவ்வுலக ஆசாபாசங்களையும் வாழ்க்கையையும் வெறுத்து விட்டு மறு உலக வாழ்க்கைக்கு ஆகுமான சாமான்களைத் தயாரிக்கவும் கப்ரில் தங்குவதற்குள்ள சாமான்களை சேகரிக்கவும் செய்வான். அப்போது இவ்வுலக வெறுப்பின் பிரகாசம் மனங்களில் பிரகாசித்து அதன் பிரயோஜனங்களும் அடையாளங்களும் முகத்தில் வெளியாகும். ஆகவே கண்ணை மூடியவனாக இவ்வுலகை விட்டு திரும்பி விடுவான்; பின் வாங்கியவனாக புறக்கணித்து விடுவான். இவ்வுலகை சொந்த ஊராகவோ தான் தங்குமிடமாகவோ ஆக்கமாட்டான். ஆயினும் அல்லாஹுத் தஆலாவிடம் செல்வதற்குண்டான தைரியத்தை உண்டு பண்ணிக் கொண்டு அவனிடமே உதவி தேடி அவனையே முன்னோக்கி இவ்வுலக வழியாகச் செல்வான்.

உன் உறுதி என்னும் வாகனம் அல்லாஹுத் தஆலாவின் சன்னிதானத்தில் செல்லும் வரையில் இவ்வுலகில் எங்கும் தங்காமல், எவ்வித இச்சைகளையும் பாராமல் சென்று கொண்டே இருக்கும். அந்தப் பரிசுத்த சன்னிதானத்தில் சென்றுதான் (அது) நிற்கும். அவ்விடம்தான் அல்லாஹுத் தஆலாவுடன் நேசமாய் இருந்து உல்லாசிக்கும் இருப்பிடம். அவ்விடம்தான் மறைவான இல்முகள் திறக்கப்படும் இடம். "ஜபரூத்"தின் இரகசியங்களும் மலக்கூத்தின் பிரகாசங்களும் உன்னை எதிர் நோக்குமிடமும் அவ்விடம் தான்.

நீ ஒழுக்கமாகவும் சங்கையாகவும் பேணுதலாகவும் அவன் முன்னிலையில் இருக்கும் போது அல்லாஹுத் தஆலா உன்னுடன் முடுகுதலாகவும், உன்னை காப்பவனாகவும் உனக்கு நன்மை செய்தவனாகவும் இருக்கக் காண்பாய்! அவன் உன்னுடன் இருக்கும் ஸ்தானமும் அவ்விடம் தான்! அவ்விதம் இருந்து கொண்டு நீ அவனிடம் முனாஜாத்து துஆ போன்ற பேச்சுக்களைப் பேசும் போது அவன் உன்னிடம் அதிகமான இஹ்ஸான்–உதவி போன்றவைகளைக் கொண்டு வசனிக்கும் இடமும் அவ்விடமாகும்!

உனது ஐயறிவின் திரைகள் நீக்கப்பட்டு ஆலமுல் மலக்கூத்தில் அவனின் தரத்தையம்–தகுதியையும் நீ தரிசிக்கும் போது, ஆலமுல் முல்கில் உன்னையும் அடிமைத்துவத்தையும் அவன் தரிசிக்குமிடம் அவனளவில் முன்னோக்குவது கொண்டு அவனை நீ பார்க்கும் போது அவன் உன்னை தன்னளவில் சேர்த்துக் கொள்வது கொண்டு உன்னை பார்க்கும் இடமும் அவ்விடமேயாகும்.

ஆகவே அந்த பரிசுத்த சன்னிதானம் அவர்களின் கல்புகள்(இதயங்கள்) ஒதுங்கும் குன்றுகளாகி விட்டது; (எனவே) அதிலேயே அவர்கள் தங்கிக் கொள்வார்கள். அதன் பின் ஹக்குகளை நிறைவேற்றுதல் எனும் வானத்தளவில் அல்லது நப்ஸின் அம்சங்கள் எனும் பூமியளவில் இறங்கினால் ஷரீஅத்தின் அனுமதியாலும் இல்ஹாம் எனும் மறைமுகமான அறிவிப்பாலும் அல்லாஹுத் தஆலாவைப் பற்றியுள்ள நல்ல விளக்கத்துடனும் மஃரிபத்தில் ஸ்திரமாய் இருப்பதோடும்

இறங்கவேண்டுமேயல்லாது அல்லாஹுத் தஆலாவை மறந்து ஒழுங்கீனமாக-ஹக்குகளை நிறைவேற்றுதல் என்னும் வானத்திலோ அல்லது சுகம் அடைதல்-ஆசை நிறைவேற்றுதல் என்னும் பூமியளவிலோ இறங்கக் கூடாது. ஆனால் மேற்கூறிய வானத்திலும் பூமியிலும் அல்லாஹுத் தஆலாவின் உதவியைக் கொண்டு அவனுக்காக அவனில் நின்றும் அவனளவில் இறங்கவேண்டும். இவ்விதமாக இறங்கும் பயணத்திற்கு நுஜூல்-ததல்லி (இறங்குதல்) என்று சொல்லப் படும். இவைகளால் "பகா-பில்லாஹ்" எனும் பதவி உண்டாகின்றது.

இக்கருத்தின் குறிப்பாகத்தான் ஒரு ஆயத்தை இவ்விடத்தில் சொல்லப் பட்டுள்ளது. அதாவது; என் ஆண்டவா! உண்மையாளர்களைச் சேர்க்கும் ஸ்தானத்தில் என்னையும் சேர்த்துக் கொள்! அவர்களை வெளியேற்றும் இடத்தில் என்னையும் வெளியேற்று! என்னை நீ வெளியேற்றுவதாயிருந்தால் உன்னை நான் உறுதி கொள்ளவும்-என்னை நீ ஏற்று சேர்த்து கொள்வதாய் இருந்தால் நான் உனது தத்துவத்தையும் சக்தியையும் பார்க்கவும் அவ்விதமான உண்மையாளர்களுடன் சேர்க்கவும் வெளியேற்றவும் செய் நாயகனே!

இன்னும் (இறைவா!) எனக்கு உதவி செய்யும் ஒரு அத்தாட்சியை நீயே ஏற்படுத்து! அந்த அத்தாட்சியானது எனது நப்ஸின் கெடுதிகளையும் ஆசாபாசங்களையும் எனக்கு அறிவித்து அக்கெடுதிகளையும் நீக்குவதற்கு எனக்கு உதவியாய்

இருக்க வேண்டும். அவ்விதமான அத்தாட்சியைக் கொண்டு எனக்கு நீ உதவி செய்வாயாக!

## 2 - வது கடிதம்

இக் கடிதத்தில் ஷரீஅத்தைப் பேணுவதோடு- ஹகீகத்தெனும் கடலோடு சேர்வதைப் பற்றி விபரிக்கப் படுகிறது.

அல்லாஹுத் தஆலாவாகிறவன் (நிஃமத்) உபகாரம் செய்வதில் தனித்தவன் என்பதாக உனது அகக் கண்கள் பார்த்து தெரிந்து கொண்டால் தன்னைப் படைத்த அல்லாஹுத் தஆலாவுக்கு நன்றி செய்வது அவசியம் என்று ஷரீஅத் ஏவுகிறது. ஆகவே மனிதர்கள் நிஃமத்துக்கு நன்றி செலுத்தும் வகையில் மூவகைப் படுவார்கள்.

அதில் ஒரு வகை மனிதர்கள் அல்லாஹுத் தஆலாவை மறந்து-மதிமயக்கத்தில் மூழ்கி உலக ஆசாபாசங்களில் மிகைத்து, அல்லாஹுத் தஆலாவை தரிசிக்கும் அகக் கண் மழுங்கினவர்கள். இவர்கள் (தங்களுக்குக் கிடைத்த) அந்த உபகாரம் (சிருஷ்டிகளான) மனிதர்களில் நின்றும் உண்டானவைகள் என்றே தெரிந்து கொள்கிறார்கள்; "உலகத்தை சிருஷ்டித்த அல்லாஹ்வில் நின்றுமுள்ளது" என்று தெரிந்து கொள்வதில்லை. (எனவே) அவ்விதமாக (மனிதன் தான் உபகாரம் செய்கிறான் என்பதாக) அவன் உறுதி கொண்டால் அவன் இணைவைப்பவன் என்பது வெளிப்படை (மறைவானதல்ல!).

உபகாரம் செய்பவன் அல்லாஹுத் தஆலாவாய் இருந்தாலும்—அதை தன்னளவில் சேர்த்து வைத்தவன் மனிதன் தான் என்று நினப்பவனின் ஷிர்க்கு (இணைவைத்தல்) மறைவானது. ஏனென்றால் இவன் அல்லாஹுத் தஆலாவை அறவே மறந்து விடவில்லை.

இரண்டாவது வகையினர் "ஹகீகத்துடையவர்கள்". இவர்கள் ராஜாதி ராஜனாகிய அல்லாஹுத் தஆலாவை தரிசித்தால் சிருஷ்டிகளை மறந்து விடுவார்கள். (அதாவது) சிருஷ்டிகளைப் பற்றிய நினைப்போ சிந்தனையோ கிடையாது. காரணங்களுக்கெல்லாம் காரணக்காரன் அல்லாஹுத் தஆலாவேதான் என்று தெரிந்து கொண்டதால்—சிருஷ்டிகளின் மூலமாக வரும் நிஃமத்(உபகாரங்)களை சிருஷ்டி கர்த்தாவில் நின்றுமுள்ளதெனக் கண்டு கொள்கிறார்கள். இவர்கள் "ஹகீகத்"தைக் கொண்டு முன்னோக்கும் அடிமைகள்; அந்தரங்கத்தின் ஒளி அவர்களில் வெளியாகி அவ்வழியில் நடப்பவர்கள். (இன்னும்) அவ்வழியின் முடிவில் சிக்குண்டு ஏகத்துவம் எனும் கடலின் பிரகாசத்தில் மூழ்கி சிருஷ்டிகளைக் காணும் கண்கள் மழுங்கி விட்டவர்கள். (இவர்களுக்கு) சிருஷ்டிகளைத் தெரிந்து நடக்கும் தெளிவைப் பார்க்கிலும் அதனைத் (தெரியாத போதையே) மிகைத்துக் கொண்டது. (இன்னும்) சிருஷ்டிகளை பார்க்கும் "பர்கு" (பிரித்தறிதல்) என்ற தன்மையைப் பார்க்கிலும்—ஹக்கனையே பார்க்கும் "ஜம்உ" (ஒன்றாய் காணுதல்) என்ற தன்மை மிகைத்துக் கொண்டது. (இன்னும் இவர்கள்) சிருஷ்டிகளை உணரும் (B)

"பகா" பார்க்கிலும்-ஹக்கில் அழியும் (F) "பனா" எனும் தன்மை மிகைத்து விட்டவர்கள்.

மூன்றாவது வகையினர்கள் (மேற்கூறிய) இவர்களைப் பார்க்கிலும் (மிகப்) பரிபூரணமுடையவர்கள். இவர்கள் ஏகத்துவம் எனும் மதுவை மிகுதமாக அருந்தி-போதைக்குப் பின்னர் தெளிவு பெற்று-வேற்றுமைகளை விட்டும் மறைந்து நிலைப்பு அதிகப் பட்டு விட்டவர்கள்.

இவர்கள் "ஹக்கை" தரிசிப்பதால் சிருஷ்டிகளை தரிசிப்பதை விட்டும் தடுக்கப்பட மாட்டார்கள்; (அதே போன்று) சிருஷ்டிகளை தரிசிப்பதால் ஹக்கை தரிசிக்கிறதை விட்டும் தடுக்கப்படமாட்டார்கள். (இன்னும்) ஹக்கில் அழிவதால் கல்காயிருப்பதும்-கல்காய் இருப்பதால் ஹக்கில் அழிவதையும் (விட்டு) தடுக்கப்படமாட்டார்கள். எல்லா அம்சங்களையும் அம்சப்படியே கொடுப்பார்கள். எல்லாவற்றின் பாத்தியதைகளையும் பாத்தியப் படியே நிறைவேற்றுவார்கள். எது போலென்றால் ஆயிஷா நாயகி (ரலி) அவர்களைப் பற்றி உண்டான படுதுாறு-பொய் விஷயத்தில் "அவர்கள் அதைவிட்டும் பரிசுத்தமானவர்கள்" எனும் ஆயத்து வந்த போது, ஆயிஷா நாயகியைப் பார்த்து அபூபக்கர் ஸித்தீக்(ரலி) அவர்கள் சொன்னார்கள், "ஏ ஆயிஷாவே! நாயகம் (ஸல்) அவர்களுக்கு நீ நன்றி பாராட்டு" என்பதாக. அதற்கு ஆயிஷா நாயகி (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் மீது ஆணையாக அல்லாஹுத் தஆலாவைத் தவிர மற்றவரெவருக்கும் நன்றி செய்ய மாட்டேன்" என்று கூறினார்கள்.

இதில் "ஹக்குக்கும்-கல்குக்கும்" நிறைவேற்ற வேண்டிய அம்சப்படியுள்ள மகாமாகிய (B)"பகா" எனும் பரிபூரண அந்தஸ்தை(யே) அபூபக்கர்(ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அறிவித்தார்கள்.

அல்லாஹுத் தஆலா திருவுளமாகிறான். "எனக்கும் உங்கள் தாய் தந்தையர்களுக்கும் நன்றி செய்யுங்கள்" என்று. இன்னும் நாயகம் (ஸல்) அவர்களும் "மனிதர்களுக்கு நன்றி செய்யாதவன் அல்லாஹுத் தஆலாவுக்கும் நன்றி செய்ய மாட்டான்" என்று அறிவித்தார்கள்.

எனவே ஆயிஷா நாயகி (ரலி) அவர்கள் (தந்தை கூறிய) அவ்வேளையில் சிருஷ்டிகள் என்ற நினைப்பை விட்டும் மறந்து-ஏகனின் தரிசனையில் அழிந்திருந்தார்கள். அதனால் (அவர்கள்) அடக்கி ஆளும் அரசனான அல்லாஹுத் தஆலாவை அன்றி மற்றெதையும் பார்க்கவில்லை. ஆகையால் அவ்விதம் சொன்னார்கள். எனவே, இந்த சம்பவத்தில் (நமக்கு) இருவகைக்குமே உதாரணமிருக்கிறது.

## வினா - விடை

வினா:- நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்-"தொழுகையில்" என் கண் குளுமையாக்கப்பட்டது" என்று சொன்னார்கள். இது அவர்களுக்குச் சொந்தமா? அல்லது இதில் மற்றவர்களுக்கும் அவ்வம்சம் உண்டா? என்று கேட்கப்பட்டதற்கு ஆசிரியர் பதிலளிக்கிறார்.

விடை:- திட்டமாக தொழுகையில் கண் குளுமையாவது (அதாவது அதிக சந்தோசமுண்டாவது) அல்லாஹுத்

தஆலாவை அறிந்து அவனை தரிசிக்கும் அளவிற்கு ஏற்படுகிறது.

எனவே நாயகம் (ஸல்) அவர்கள் அறிவு தரிசனை போல் மற்றெவருக்கும் இருக்காது. அது போன்றே நாயகம் (ஸல்) அவர்களின் சந்தோஷம் மற்ற எவருக்கும் ஏற்படாது.

இக் கருத்தினை நாயகம் (ஸல்) அவர்களின் "சொல்" சுட்டிக் காட்டுகிறது.

அதாவது "தொழுகையினால் கண் குளுமை ஆகிறது" என்று சொல்லாமல், தொழுகையில் என்றார்கள். ஏனெனில் நாயகம் (ஸல்) அவர்களின் கண் "அல்லாஹ்" அல்லாத வஸ்துக்களினால் குளுமையாகாது. (எனவே) தொழுகையும் அவன் அல்லாததில் உள்ளது தான். ஆகவே நாயகம் (ஸல்) அவர்களுக்கு தொழுகையினால் கண் குளுமை ஆவதில்லை. "அல்லாஹ்" அல்லாத வஸ்துக்களால் நாயகம் (ஸல்) அவர்களின் கண் எவ்விதம் குளுமையாகும்?

மற்றவர்களுக்குங் கூட நாயகம் (ஸல்) அவர்கள் "நீங்கள் அல்லாஹுத் தஆலாவைப் பார்ப்பது போல் வணங்குங்கள்" என்று ஏவுகிறார்கள்.

ஆகவே அல்லாஹுத் தஆலாவை பார்ப்பதோடு அவனல்லாதவைகளைப் பார்ப்பது இயலாது.

இவ்விதமாக நாயகம் (ஸல்) அவர்கள் மற்றவர்களுக்கு ஏவும் போது நாயகம் (ஸல்) அவர்களின் கண் மற்ற வஸ்துக்களைக் கொண்டு குளுமையாகாது என்று அவர்களின் வார்த்தையே அறிவிக்கிறது.

தொழுகையினாலும் சிலவேளை கண் குளுமையாகின்றது என்று யாரேனும் சொன்னால் அதுவும் சரிதான். (அது ) அல்லாஹுத் தஆலாவின் வரிசையினாலும் அவனின் உதவியினாலும் அவ்விதம் ஏற்படும்.

அவனே திருகுர்ஆனில் கூறுகின்றான். "அல்லாஹ்வின் வரிசையினாலும் அவனின் கிருபையாலும் அவர்கள் சந்தோஷப்படட்டும் என்று நபியே நீங்கள் சொல்லுங்கள்" என்று.

இவ்விதம் அல்லாஹுத் தஆலா சொல்லும் போது தொழுகையினால் ஏன் சந்தோஷம் ஏற்படாது? ஏன் கண் குளுமை ஆகாது?

ஆனால் சிந்திப்பவர்களுக்கு இந்தத் திருவசனத்தில் ஒரு விடை இருக்கிறது. அதாவது "அதனால் அவர்கள் சந்தோஷப்படட்டும்" என்று தான் அல்லாஹ் கூறினானே அன்றி "நீங்கள் சந்தோஷப் படுங்கள்" என்று சொல்லவில்லை. ஆகவே உங்க(நாயகம்-(ஸல்)அவர்க)ளின் சந்தோஷம் அல்லாஹ்வைக் கொண்டுதான்.

இக் கருத்தை வேறொரு ஆயத்திலும்-"நபியே! அல்லாஹு என்று நீங்கள் சொல்லுங்கள். மற்றவர்களை விட்டு விடுங்கள். அவர்கள்-அவர்களின் வீணான கருமத்தில் விளையாடட்டும்" என்று சொல்கிறான்.

ஆகவே தொழுகையினால் சந்தோஷம் ஏற்படுவது மற்றவர்களுக்குத் தான்.

நாயகம் (ஸல்) அவர்களுக்கு தங்களின் மஹ்பூபாகிய அல்லாஹுத் தஆலாவை தரிசிப்பது கொண்டுதான் சந்தோஷம் ஏற்படும் என்று இத் திருமறை வசனம் மூலமாகத் தெரிகிறது.

## 3வது கடிதம்

இக் கடிதத்தில் அல்லாஹுத் தஆலாவின் நிஃமத்து உபகாரங்களைக் கொண்டு சந்தோஷமடைவதை சொல்லப் படுகிறது.

அல்லாஹுத் தஆலாவின் புறத்திலிருந்து "நிஃமத்" (உபகாரங்கள்) வரும் போது மனிதர்கள் மூன்று வகைப் படுகிறார்கள்.

அதில் முதல் கூட்டத்தினர்கள் அந்த உபகாரத்திலுள்ள அனுபவங்களை அனுபவித்துக் கொண்டு சந்தோஷமடைகிறார்கள்; அந்த உபகாரத்தை உண்டாக்கி அனுப்பிய அல்லாஹுத் தஆலாவையோ இவனளவில் சேர்த்து வைத்தவனையோ நினைப்பதே இல்லை. இவர்கள் மதிமறந்தவர்கள். இவர்களைப் பற்றி அல்லாஹுத் தஆலா திருகுர்ஆனில் கூறுகிறான்:

"அவர்களுக்குக் கொடுக்கப் பட்டவைகளைக் கொண்டு அவர்கள் சந்தோஷப்படும் போது நாம் அவர்களை திடீர் என பிடித்திடுவோம். அவர்களுக்கு உபகாரங்கள் அதிகம் ஆக ஆக மறதி மயக்கமும் அதிகரித்துக் கொண்டே இருக்கும். ஆண்டவனுக்கு நன்றி செய்யவுமாட்டார்கள். இது அவர்களை சோதனைக்காக விட்டுப் பிடிப்பதாகும். இறுதியில் பலமான பிடியாகப் பிடித்துக் கொள்வான்."

இரண்டாவது கூட்டத்தினர்கள்-இவர்களும் அல்லாஹுத் தஆலாவின் உபகாரத்தைக் கொண்டு சந்தோஷப்படுவார்கள். ஆனால் அதை நிஃமத்தாக அனுப்பியவனை(யும்) மறந்து விட மாட்டார்கள். அவனுக்கு நன்றி(யும்) செய்வார்கள். இவர்களைப் பற்றி திருகுர்ஆனில் அல்லாஹ் திருவுளமாகிறான்:

"அல்லாஹ்வின் வரிசையாலும்-அவன் கிருபையாலும் இவைகளினால் அவர்கள் சந்தோஷப்படட்டும்" என்று. (எனவே) இவர்கள் முதல் கூட்டத்தை விட மேலானவர்களாய் இருந்தாலும்-நிஃமத்தின் பக்கம் கவனமாய் இருப்பதால் குறையுடையவர்கள் தான். மூன்றாவது கூட்டத்தினர்கள்-இவர்கள் அல்லாஹுத் தஆலாவைக் கொண்டு சந்தோஷமடைவார்கள். (ஆனால்) நிஃமத்தின் வெளிப்படையான சுகமோ அதன் அந்தரங்கமான அல்லாஹுத் தஆலாவின் நன்கொடை என்பதோ-அல்லாஹுத் தஆலாவை விட்டு அவர்களை பராக்காக்காது. இவர்கள் அல்லாஹுத் தஆலா அல்லாததை மறந்து விட்டு அவனின் தரிசனையிலேயே கவனமாய் இருப்பார்கள். அவனைத் தவிர மற்றெதையும் கவனிக்க மாட்டார்கள். இவர்களைப் பற்றி அல்லாஹுத் தஆலா கூறுகிறான்:

"நபியே! நீங்கள் அல்லாஹ் என்று சொல்லுங்கள். மற்றவர்களை அவர்களின் வீணில் விட்டு விடுங்கள். தத்தளிக்கட்டும்" என்று கூறுகிறான்.

தாவூது நபி (அலை) அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா வஹீ அறிவித்தான்:

"தாவூதே! ஸித்தீகீன் (உண்மையாளர்)களுக்குச் சொல்லுங்கள். என்னைக் கொண்டு அவர்கள் சந்தோஷமடையட்டும் என் திக்ரைக் கொண்டு அவர்கள் சுகம் அடையட்டும்" என்று அருளினான்.

ஆகவே என்னையும் உங்களையும் அவனைக் கொண்டே சுகமடைபவர்களாய் அல்லாஹூத் தஆலா ஆக்குவானாக! இன்னும் அவனைப் பற்றிய விளக்கமுடையவர்களாக நம்மனைவோரையும் ஆக்குவானாக! மதி மறந்தவர்களாக நம்மை ஆக்காதிருப்பானாக!

யா அல்லாஹ்! உனது கிருபை கடாட்சத்தால் முத்தகீன்கள் வழியில் எங்கள் யாவரையும் நடத்தாட்டுவாயாக! ஆமீன். ஆமீன். யாரப்பல் ஆலமீன்.

## முனாஜாத்து

1. யா அல்லாஹ்! நான் ஐஸ்வரியம் உள்ளவனாய் இருக்கும் போதே உன்னிடம் தேவையுள்ளவனாய் இருக்க-நான் ஏழையாய் இருக்கும் போது எவ்விதம் உன்னிடம் தேவையுடையோனாய் ஆகாதிருப்பேன்?

2. யா அல்லாஹ்! அறிவாளியாய் இருக்கையிலேயே (எத்தனையோ விஷயங்களில்) "ஜாஹிலாய்" இருக்கும் நான் ஜாஹிலாக இருக்கும் போது எப்படி மிகு ஜாஹிலாகாமல் இருக்க முடியும்?

3. இறைவா! உன் பரிபாலனத்தின் வகைகளும்-தாமதமின்றி நிகழும் உனது "கலா கத்ரும்"-உனது நன்கொடை எனும் வஸ்தளவில் ஒதுங்குவதையும், கஷ்டங்களில் உன்னை

விட்டும் ஆசை முறிவதையும் விட்டு பெரியோர்களான அவ்லியாக்களை தடுத்து விட்டது.

4. இறைவா! என்னுடைய பழிப்புக்குத் தகுந்தவைகள் தான் என்னில் நின்றும் உண்டாகின்றன. உன்னில் நின்றுமோ உன் சங்கைக்குத் தகுந்தவைகள் உண்டாகி(க் கொண்டிருக்கின்றன.)

5. என் நாயனே! எனது எழுமைத்தனம் உண்டாவதற்கு முன்னாலேயே (நீ) என் மீது இரக்கமும்–கிருபையும் உள்ளவன் என்று நீயே (உன்னை) வர்ணித்திருக்க–எனது எழுமைத்தனத்திற்குப் பின்னர் அவ்விரண்டையும் என்னை விட்டு (நீ) விலக்கிக் கொள்வாயா?

6. என் நாயனே! என்னில் நின்றும் ஏதேனும் நன்மைகள் உண்டானால் அது உனது கருணையினால் உண்டாயின. மேலும் அவைகள் (நீ) என் மீது (செய்த) உனக்குள்ள நிஃமத்துகளாகும். இன்னும் என்னில் நின்றும் ஏதாகிலும் குற்றங்கள் எற்பட்டால் அவை உனது நீதமாகும்; (நீ) என்னிடம் கேள்வி கேட்க வேண்டிய(தற்கு) ஆதாரம் உனக்கு இருக்கிறது.

7. யாஅல்லாஹ்! எனக்கு நீ வக்கீலாக இருக்க என் மீது (நீ) எப்படி குற்றம் சாட்டுவாய்? எனக்கு நீ(யே) உபகாரியாய் இருக்க பழிப்பும்–கேவலமும் எனக்கு எவ்வாறு ஏற்படும்? நீயே எனக்கு உதவியாளனாய் இருக்க நான் எவ்விதம் ஏமாற்றமடைவேன்?

ஹா!!! இதோ நான் எனது எழுமையின் பொருட்டால் உன்னிடம் உதவி தேடுகிறேன். மன்றாடுகிறேன். உன்னிடம் கொண்டு வர முடியாத (தகுதியற்ற) எழுமையைக் கொண்டு நான் உன்னிடம் எப்படி மன்றாடுவேன்?

(யா அல்லாஹ்!) எனது நிலைமைகள் உனக்கு (மிக நன்றாக) தெரிந்திருக்க நான் உன்னிடம் எப்படி முறையிடுவேன்? அல்லது உன்னால் எனக்கு உண்டா(கி இருக்)கும் பேச்சுத் தன்மையைக் கொண்டு உன்னிடமே நான் எவ்விதம் அவைகளைச் சொல்லிக் காட்டுவேன்?

(எனது நாயனே!) என் மேலெண்ணம் உன்னை அடைய வேண்டுமென்ற எண்ணத்தோடு–உன்னை முன்னோக்கி வர நாடும்போது எங்ஙனம் அது ஏமாற்றமடையும்?

(எனது நாயனே!) என் நிலைகள் உன்னால் எற்பட்டு உன்னைக் கொண்டே பற்றி நிற்க அந்நிலைகள் எங்ஙனம் நல்லதல்லாமலாகும்?

8. இறைவா! நான் பெரிய மடையனாய் இருந்தும் உனக்கு என் மீது எவ்வளவு இரக்கம் இருக்கிறது? (இன்னும்), எனது செயலெல்லாம் கெட்டவைகளாய் இருந்தும் உனக்குள்ள கிருபை என் மீது எவ்வளவோ இருக்கிறது?

9. இறைவா! எதுதான் என்னளவில் உன்னை நெருங்க வைத்தது? எது தான் என்னை உன்னை விட்டும் தூரமாக்கியது?

10. இறைவா! என் மீது உனக்குள்ள இரக்கம் எவ்வளவு இருக்கிறது! (அங்ஙனமிருக்க) உன்னை விட்டும் என்னை எது தான் தடுக்கக் கூடும்?

11. நாயனே! சிருஷ்டிகளும்–உலகங்களும் வேற்றுமைப் படுவதால், என்னில் நின்றும் உனது நோக்கம் எல்லா வஸ்துக்களிலும் உன்னை அறிவதும், எதிலும் உன்னை தரிசிக்காமல் இருக்கக் கூடாது என்பதும் தான் என்று நான் அறிந்திருக்கிறேன்.

12. யா அல்லாஹ்! எனது குற்றங்கள் பேச விடாமல் என்னை ஊமையனாக ஆக்கும் காலமெல்லாம்–உனது சங்கை என்னைப் பேச வைக்கிறது. எனது குணங்கள் என்னை ஆதரவு முறியச் செய்யும் காலமெல்லாம் உனது நிஃமத்துகள் என்னை ஆதரவு வைக்கச் செய்கிறது.

13. யா அல்லாஹ்! ஒருவரின் நன்மைகளே தீமைகளாய் இருந்தால், அவரின் தீமைகள் எப்படி தீமை இல்லாமலிருக்கும்? ஒருவரின் மனோ நிலை குற்றமுள்ளவைகளாய் இருந்தால் குற்றங்கள் எப்படி குற்றமற்றவைகளாகும்?

14. இறைவா! மறுக்க முடியாத உனது தீர்ப்புகளும்–அடக்கி ஆளுதலெனும் உனது நாட்டங்களும் எவருடைய சொல்லையும் சொல்லாக விட்டு விடவில்லை. எவருடைய நிலைமைகளையும் நிலைமைகளாக விடவில்லை.

15. இறைவா! நான் நம்பும் எனது எவ்வளவோ அழகான இபாதத்துகளையும்–நேரான நிலைமைகளையும் உனது நீதம்

இடித்துவிட்டது. மேலும் உனது கருனை அதன் மீதுள்ள நம்பிக்கையை விட்டும் என்னை விலக்கி விட்டது.

16. என் நாயனே! செயலுருவில் என் வழிப்பாடுகள் நேமமாய் இல்லாவிடினும் அச் செயலில் எனக்கு நேமமான பிரியம் உண்டென்பதை நீ அறிந்திருக்கிறாய்!

17. என் நாயனே! நீ அடக்கி அரசாளுபவனாய் இருக்க நான் எப்படி ஒரு வழிபாட்டைச் செய்ய உறுதியாக எண்ணுவேன்? (ரஹ்மானே!) நீ ஏவும் போது (நான்) எப்படி (வழிபாட்டின் படி நடக்க) உறுதி கொள்ளாமல் இருப்பேன்?

18. யா அல்லாஹ்! உன்னை விட்டு தூரப்படுத்தும் சிருஷ்டிகளில் என்னை நீ தள்ளிக் கொண்டிருக்கிறாய்! ஆகையால் (ரஹ்மானே!) உன்னளவில் சேர்க்கும் ஊழியத்தால் என்னை உன்னளவில் சேர்த்துக் கொள்!

19. யா அல்லாஹ்! தாம் உண்டாவதற்கு உன்னிடம் தேவையாகும் சிருஷ்டிகளைக் கொண்டு உன் பேரில் எவ்விதம் ஆதாரம் தேடுவது? (யா அல்லாஹ்!) உனக்கில்லாத ஒரு வெளிப்பாடு மற்றவைகளுக்கிருந்தாலல்லவா அது உன்னை வெளியாக்கப் போகிறது?

அது மட்டுமல்ல; ஆதாரத்தால் உன்னைத் தேட நீ எப்போது மறைந்தாய்? அல்லது இந்த சிருஷ்டிகள் உன்னளவில் சேர்த்து வைக்க நீ எப்போது தூரமானாய்?

20. என் நாயனே! சிருஷ்டிகளில் உன்னைக் காணாத கண்கள் குருடானவை. உனது பிரியத்தை பெரும் பாக்கியமாகக் கருதாத அடிமையின் வியாபாரம் நஷ்டமானது.

21. என் இறைவா நீ ஏவினாய்! ஆகையால் (நாயனே!) அடர்ந்த பிரகாசத்தோடும், நேரான அகப்பார்வையோடும் நீ என்னை சிருஷ்டிகளில் மீட்டு, அப்போது தான் முதலில் அவைகளை விட்டும் உன்னளவில் மீண்டது போன்று–இனியும் அவைகளை விட்டு (நான்) கல்புகளை பேணியவனாகவும், அவைகளின் மீதுள்ள நம்பிக்கைகளை நீக்கியவனாகவும் உன்னளவில் மீள்வேன். (நாயனே!) நீயே எல்லாவற்றிற்கும் தராணியுள்ளவன்.

22. இறைவா! இந்த என்னுடைய எழுமைத்தனம் உனக்கு வெளிப்படையாகத் தெரிந்தது தான்; என்னுடைய நிலைமைகள் (எதுவும்) உனக்கு மறைந்ததல்ல!

ஆகையால் உன்னளவில் சேருவதற்கு உன்னையே கேட்கிறேன்! உன்னையே உனக்கு ஆதாரமாய் கொள்கின்றேன்!

(எனவே எனது நாயனே!) உனது பிரகாசம் கொண்டே உன்னளவில் என்னை நீ நேர் வழிப் படுத்து! உண்மையான ஊழியத்தைக் கொண்டு உன் முன்னே என்னை நிற்கச் செய்!

23. இறைவா! உனது இல்மின் களஞ்சியத்தில் நின்று (நீ) எனக்குப் படித்துக் கொடு! காப்பவன் எனும் உனது நாமத்தின் பொருட்டால் என்னை நீ காத்துக் கொள்!

24. யா அல்லாஹ்! என்னை மஜ்தூபுகளின் வழியில் நடத்து! உன்னை முடுகினவர்களின் அந்தரங்க நிலையில் என்னை ஸ்திரப்படுத்து!

25. யா அல்லாஹ்! உனது பரிபாலனத்தால் என் பரிபாலனத்தை விட்டு தேவையறச் செய்! உன் சுய

நிர்ணயத்தால் எனது நிர்ணயத்தை விட்டு தேவையறச் செய்! என்னுடைய துளும்புதலில் என்னை நிலை பெறச் செய்!

26. நாயனே! நான் மௌத்தாகி அடக்கப்படுவதற்கு முன் என் நப்ஸின் கேவலத்தை விட்டு என்னை நீக்கி, "ஷிர்க்கு", "சந்தேகம்" இவைகளை விட்டும் சுத்தப் படுத்து!

என் (நாயனே!) உன்னைக் கொண்டே உதவி தேடுகிறேன். எனக்கு நீயே உதவி செய்வாயாக! (என் நாயனே!) உன்னிடமே என்னை நான் பரஞ்சாட்டுகிறேன், மற்றவர்களிடம் என்னை சாட்டி விடாதே! (என் நாயனே!) உன்னிடமே (என் தேவையை) கேட்கிறேன்; என்னை நீ ஏமாற்றமடையச் செய்து விடாதே!

யா அல்லாஹ்! உன் கருணையை (நான்) ஆசிக்கிறேன்! (என்னை நீ) நிராதரவாக்கி விடாதே! (நாயனே!) உனது சந்நிதானத்தை சேருகிறேன்; என்னை (நீ) துாரத்திலாக்கி விடாதே; (யா அல்லாஹ்!) உனது வாசலில் நிற்கிறேன். என்னை விரட்(டி வி)டாதே!

27. நாயனே! உன்னுடைய பொருத்தமானது உன்னுடைய காரணங்களை விட்டு நீங்கி இருக்க, அதற்கு என்னில் நின்றும் எப்படி ஒரு காரணம் உண்டாகும்?

உன் தாத்தில் நின்றுமே உனக்கு ஒரு பிரயோஜனம் சேருவதை விட்டு நீ தேவையற்றவனாக இருக்க, என்னை விட்டு நீ எப்படி தேவையுள்ளவனாய் ஆக முடியும்?

28. இறைவா! உன் "கலா கத்ரு" என்னை மிகைத்து விட்டது. என் இச்சை என்னை ஆசை என்னும் ஜெயிலில்

அடைத்துக் கொண்டது. ஆகையால் நீயே எனக்கும் எனது நேசர்கட்கும் உதவி செய்கிறவனாய் இருந்து உதவி செய்வாயாக! (நாயனே!) உன் கருணையால் என்னை தேவையறச் செய்வாயாக! அதாவது (நாயனே) உன்னைக் கொண்டு எனது தேட்டத்தை விட்டும் நான் தேவையற்றிருக்க வேண்டுகிறேன்.

(நாயனே!) உன்னை அறிந்து, உன்னை ஒருமைப் படுத்துவதற்காக நீ தான் உனது அவ்லியாக்களின் கல்புகளை பிரகாசிக்கச் செய்தாய்! உனது நேசர்களின் கல்புகளில் நின்றும் நீ தான் வேற்றுமைகளை நீக்கினாய்! ஆகவே அவர்கள் உன்னைத்தவிர வேறு யாரையும் பிரியப் படவில்லை; மற்றும் எவரையும் அண்டவுமில்லை.

(நாயனே!) உலகங்கள் அவர்களை வெறுத்த போது நீ தான் அவர்களுக்கு மனம் உவந்த சிநேகிதன்! (யா அல்லாஹ்!) நீ தான் அவர்களுக்கு நேரான வழியைக் காண்பித்தவன்! ஆகவே அவர்கள் நேரான வழியைக் கண்டு கொண்டார்கள்.

(இறைவா!) உன்னை இழந்தவன் எதைத் தான் பெற்றுக் கொண்டான்? (யா அல்லாஹ்!) உன்னைப் பெற்றவன் எதைத்தான் இழந்தான்? (நாயனே!) உன்னல்லாததை நேசித்தவன் பலன் பெறுவதில் ஏமாற்றமடைந்தான்! உன்னை விட்டவன் உன்னை விட்டு அகன்றதால் நஷ்டமடைந்தான்!

29. இறைவா! உனது உபகாரங்கள் நிற்காமல் நடந்து கொண்டும் (நீ) உபகாரம் செய்யும் பழக்கத்தை மாற்றாமலும்

இருக்க; (நான்) மற்றவர்களிடம் எப்படி உபகாரத்தைத் தேடுவது? பிறரிடம் தான் எப்படி தேடுவது?

உன் சிநேகிதர்களுக்கு பிரியத்தின் இன்பங்களை நீ ஊட்டிய போது–உன்னை நெருங்கி உன் முன்னிலையில் நிற்க செய்த இறைவா!

தன் அவ்லியாக்களுக்கு தன் பயமென்னும் ஆடைகளை அணியச் செய்து–தனது கருணையால் சங்கை பெற்று தன் முன் நிற்கச் செய்த இறைவா!

நினைப்பவர்களுக்கு முன்பே நீ நினைப்பவனாக இருந்தாய்!

ஆபிதீன்கள் முன்னோக்குவதற்கு முன்பே நீ உன் உபகாரங்களைக் கொண்டு வெளியானாய்!

தேடுபவர்களுக்கு முன் நீயே உன் கொடைகளைக் கொண்டு உபகாரம் செய்தாய்!

கடன் கொடுப்பவர்களுக்கு நீ நன்கொடை கொடுப்பதால் நீ தான் அதிக நன்கொடை கொடுப்பவன்.

30. யா அல்லாஹ்! உனது கிருபையால் நான் உன்னை அடைவதற்கு என்னை நீ அழைத்துக் கொள்!

உன்னளவில் நான் முன்னோக்குவதற்கு உனது கிருபையால் என்னை நீ இழுத்துக் கொள்!

31. யா அல்லாஹ்! நான் உனக்கு வழிப்பட்ட போதிலும் என் பயம் நீங்காதது போல், நான் உனக்கு விரோதம் செய்தாலும் உன்னை விட்டும் என் ஆதரவு அற்று விடாது!

32. யா அல்லாஹ்! நான் இறைவனல்லாத மற்ற வஸ்துக்களின் பக்கம் திரும்பி அவைகளை நோக்கினால்

அவ்வஸ்துக்கள் என்னை நோக்கி; உன் இறைவனைப் பார் எங்களை நோக்கிப் பாராதே! என இவ்வுலகமானது என்னை உன்னளவில் தள்ளுகிறது. உனது கருணையால் என் அறிவு என்னை உன் மீது நிலை பெறச் செய்கிறது!

33. நாயனே! நீயே எனது மேலெண்ணமாயிருக்க நான் எங்ஙனம் ஏமாற்றமடைவேன்? உன் மீதே நான் பரம் சாட்டி இருக்க எங்ஙனம் நான் கேவலமடைவேன்?

34. நாயனே! நீ என்னை தாழ்ந்த நிலையில் நிறுத்தாட்டி இருக்க நான் எவ்விதம் மேம்பாடு அடைவேன்? உன்னளவில் என்னை நீ சேர்த்திருக்க நான் எவ்விதம் மேன்மை அடையாமலிருப்பேன்?

(யா அல்லாஹ்!) என்னை நீ ஏழையாக வைத்திருக்க நான் எங்ஙனம் ஏழையில்லாமல் இருப்பேன்? உனது உள்ளமையைக் கொண்டு (நீ) என்னை தேவையறச் செய்திருக்க நான் எப்படி ஏழையாவேன்?

இறைவா! உன்னைத் தவிர வேறெந்த வஸ்துக்களும் தனி உள்ளமை உள்ளதாயில்லை! எல்லா வஸ்துக்களிடமும் நீ அறியப்பட்டவனாக ஆகி விட்டாய்! உன்னை அறியாத எந்த வஸ்துக்களும் இல்லை. (எனவே) எல்லா வஸ்துக்களிலும் உன்னை நான் தெரிந்து கொள்ளும் படியாக நீ என்னில் அறியப் பட்டாய்! ஆகவே எல்லா வஸ்துக்களிலும் உன்னை வெளிப்படையாய்ப் பார்த்துக் கொண்டேன். நீயே எல்லா வஸ்துக்களிலும் வெளியாகி இருக்கிறாய்!

35. உலகங்கள் அல்லாஹுத் தஆலாவின் அர்ஷில் மறைந்தது போன்று–அவன் தன்னுடைய கிருபையால் தன் அர்ஷில் சீர் பெற்று அமர்ந்த போது "அர்ஷை" தன் கிருபையினுள் மறைந்திட செய்த அல்லாஹ்வே!

நீ உன்னுடைய எல்லா சிருஷ்டிகளையும் "அர்ஷு" எனும் சிருஷ்டியைக் கொண்டு அழித்து விட்டாய்! (நாயனே!) பிரகாச அடர்த்தியால் வேற்றுமை (என்னும் அர்ஷுயும்) அழித்து விட்டாய்!

கண்கள் அவனைப் பார்ப்பதை விட்டு தனது பெருமை எனும் திரையால், மறைந்து கொண்ட நாயனே!

தன் பரிபூரண அழகால் வெளியாகி கல்புகள் தன்னுடைய வலுப்பத்தை உறுதிப் படுத்திச் செய்த இறையோனே!

நீயே வெளியாகி இருக்க நீ எப்படி மறைந்தவனாவாய்? அல்லது நீயே முன்னிலையாகி காப்பவனாய் இருக்க நீ எவ்விதம் மறைந்தவனாவாய்?

அல்லாஹுத் தஆலாவே யாவர்க்கும் உதவி செய்பவன்; அவனிடமே நான் உதவி தேடுகிறேன்.

அல்ஹம்துலில்லாஹி.